உ
சிவமயம்.

# தேவகோட்டை, இரகுசேரி
# மந்திரமூர்த்தி விநாயகர்
# பிள்ளைத் தமிழ்



ஆக்கியோன்;

ஆ. சத்திவேற்பிள்ளை.

கணபதிதுணை.

இறகுசேரி

# மந்திரமூர்த்திவிநாயகர்

# பிள்ளைத்தமிழ்.

இது
தேவகோட்டை.,
ஸ்ரீமான் கி. கரு. ராம. சாமிநாதன்செட்டியாரவர்கள்,
விருப்பத்தின்படி



யாழ்பாணம், வண்ணைநகர்
ஸ்ரீலஸ்ரீ சி. சுவாமிநாதபண்டிதரவர்கள்
பிரதம மாணாக்கர்
ஸ்ரீமத் ஆ. சத்திவேற்பிள்ளை அவர்களால்
இயற்றப்பெற்றது.



விய௵ ஆவணி௴

3/2



# அறிவிப்பு.

இப்புத்தகம் திருவையாற்றிலுள்ள "சீனிவாசப்பிரஸி"ல் பிரிண்டு செய்யப்பெற்று. ஷை பிரஸின் மானேஜர் விரைவில் பைண்டு செய்து கொடுக்க முடியாதென்று சொல்லியதைமுன்னிட்டு கண்டனூர் "நகரத்தார் பிரஸி"ல் டைட்டல் பிரிண்டும், பைண்டும் செய்து முற்றுப்பெற்றது.

இங்ஙனம்,

ஆ. ச.

# பிழை திருத்தம்.

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 10 | 2 | 6 | மும்முடி. | மும்முடி |
| 17 | 2 | 1 | கிணறுக்ட்டி | கிணறுகட்டி |
| 20 | 11 | 2 | மநேக்ங் | மநேகங் |
| 26 | 23 | 4 | கூறுமாரே | கூறுமாறே |
| 31 | 2 | 5 | நலகிப் | நல்கிப் |
| 11 | 4 | 3 | மாரியாழ் | மாரியர் |
| 12 | 6 | 7 | மமைபொழி | மழைபொழி |
| 22 | 2 | 11 | இடுதல்போற | இடுதல்போற் |
| 42 | 5 | 15 | யைங்கரனே | யைங்கரனெ |
| 42 | 6 | 13 | கரியவனே | கரியவனெ |
| 46 | 2 | 16 | சி.தையேலே | சிதையேலே |
| 55 | 8 | 10 | மவிடவே | மருவிடவே |

உ

சிவமயம்

# முகவுரை.

---

அமிழ்தினு மினிய தமிழ்மொழி தோன்றிய பாண்டி நாட்டின்கண் நகரதன வணிகர்வாழ் சிறப்புப் பொருந்திய நகரம் பலவற்றுள்ளும் வளமிகுந்திலங்கும் தலைநகராகிய தேவகோட்டைத் திருநகரில் வாழ்ந்துவருந் தனவணிகரில் இலுப்பைக்குடிக் கோயிலைச்சார்ந்த ஐந்து வீட்டார்கள் என்னும் புகழ்மிக்க எமது குல முதல்வரும், கல்வி செல்வம், அறிவு, ஒழுக்கம், வாய்மை அடக்கம், இரக்கம், ஈகை முதலியன உடையவரும், சிவதரும பரிபாலனரும், நல்லொழுக்கம் அமைந்தவருமாகிய கருப்பன் செட்டியா ரென்னுந் திருநாமத்தையுடைய சிவநேசச்செல்வர் மேற்படி தேவகோட்டை நகரின் குணபாலிற் செந்நெற் பழனஞ் செறிந்து பலவளங்களோடிலங்கும் இறகுசேரிப் பதியில் எழுந்தருளிய ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகருக்கு, ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் அழகுமிக்க ஆல யமும், அவ்வாலயத்தின் முன்னர்ப் பூரணசந்திரன் போன்ற வட்டவடிவுற்ற தடாகமும், திருநந்தனவனமுஞ் சிறந்தொளிர அமைத்துப் பூசா நிபந்தங்கள் திட்டஞ்செய்து ஆதிசைவரைக் கொண்டு ஆகமவிதி வழாது பூசை செய்வித்து வணங்கி வழிபாடியற்றி வருவாராயினர்.

இவ்வாறு சிவப்பணியை அன்புடன் புரிந்து வந்த கருப்பன் செட்டியாருக்குப் பின்னர், அவரது சந்ததியார் பலரும் ஸ்ரீமந்திரமூர்த்தி விநாயகரைத் தமது குலத்து வழிபடு

கடவுளாகக் கொண்டு மனமொழி மெய்கள் ஒருங்குறத் தொண்டு செய்து அப்பெருமானுடைய திருவருட்பேற்றால் எல்லா நலன்களுமெய்த இனிது வாழ்ந்து வந்தனர்.

எமது குலத்தினரும், சகல வளத்துடன் மகிழ்ந்து வாழ்ந்த ஸ்ரீமான். கருப்பன் செட்டியாரின் அருந்தவப்புதல் வரும், உத்தம குணங்கள் அனைத்தும் ஒருருக்கொண்டாற் போன்றவரும், ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகப் பெருமானின் திருவடித்தாமரைகளை அநவரதம் நினையாமல் நினைந்து வணங்கித் துதித்து வாழுஞ் செல்வரும், எனது ஆருயிர் நண்பருமான ஸ்ரீமாந். கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார் அவர்கள் தமது இறைவனுகிய ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகரை ஒப்பற்ற பிள்ளைத்தமிழ்ப் பிரபந்த வாயிலாக வணங்கி மகிழ வேண்டுமென நீண்டகாலமாகத் தம்மனத்திற் கொண்டுள்ள எண்ணத்தைப் பொன்னிவளந்திகழ் புகழுடைச் சோழநாட்டின் கண்ணதாய பட்டுக்கோட்டை நகரின் பாங்கர் மேவுந் தாமரங்கோட்டைப்பதியில் முதிர்ந்த சைவப்பற்றுடையரான ஆறுமுகம் பிள்ளையவர்களின் அருந்தவப் புதல்வராய்த் தோன்றிச் சைவசமயமே தனிச்சமயமென்றுணர்ந்து எக்காலத்தும் அவ்வழியிற் பிறழாது நிற்பவரும், கலைமகளின் திருவருட் பேற்றையடைந்து நாவன்மையிலும் பாவன்மையிலுஞ்சிறந்து கற்றவர் போற்றும்புகழுடையவரும், மதுரைத் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீன வித்துவானுமாகிய தமது ஆசிரியர், ஸ்ரீமத். ஆ. சத்திவேற் பிள்ளையவர்களிடம் அறிவிக்க, அப்புலவர் பெருமானுமதற்கியைந்து ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகருக்குச் சொற்சுவை பொருட்சுவை நிறைந்த பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தை இயற்றி முடித்தனர்.

இயற்றி முடித்த ஸ்ரீ மந்திர மூர்த்தி விநாயகர் பிள்ளைத் தமிழை மேற்படி சத்குவேற் பிள்ளை அவர்கள் கலியுக வருடம் ருகூசயிச சுபாநு ஆண்டு மாசித்திங்கள் உகு-ந் திகதி சோமவார நன்னாளில் ஸ்ரீ மந்திரமூர்த்தி விநாயகர் திருச்சந்நிதான மண்டபத்தில் நகரதன வைசியச் செல்வர்களும், புலவர் பெருமக்களும், ஏனையோருங் குழுமிய பேரவையின்கண் அரங்கேற்றி அனைவரையும் மகிழச் செய்தார்கள். சபையிற் குழுமியபலரும் இப்பிரபந்தத்தை ஆக்கியோரையும், ஆக்குவித்தோரையும் வாயாரப் புகழ்ந்து வாழ்த்தியகிழச் செய்தார்கள்.

இப்பிரபந்தம் எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளின் பிரபந்தமானதால் ஒவ்வொரு அன்பர்களும் தினமும் பாராயணஞ்செய்து ஸ்ரீ மந்திரமூர்த்தி விநாயகர் திருவருளைப்பெற்று இம்மை மறுமை இன்பங்களை அடைந்துய்வார்களாக.

இங்ஙனம்.

க. முரு. கரு. ராம. சோம. இராமநாதன்.

---

குறிப்பு:— இறகுசேரி என்னுமித்தலத்தை இரவிசேரி எனவுங் கூறுவார்கள்.

சிவமயம்.

# சிறப்புப் பாயிரங்கள்

மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை ஆசிரியர்
ஸ்ரீமத். சு. நல்லசிவன் பிள்ளை அவர்கள் இயற்றியது.

---

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

கற்பகப்பைந் தாருவுறு பதியென் கோவிங்
கலனுறையும் பதியென்கோ கவின்மிக் கார்ந்த
வற்புதஞ்சேர் நாகருறை பதியென் கோவிவ்
வவனியினி லெதனையிணை யறைய கிற்பேன்
பொற்புமிகுந் திருதேவ கோட்டை யென்னும்
புனிதநக ரினையதனைப் பொருவ தன்றே
சிற்பநன்னா லுணர்ந்தோரும் புகலற் கொண்ணாத்
திருமிகுமிந் நகர்ப்பெருமை செப்பற் பாற்றோ. (க)

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

இந்நக ரினுக்குப் பாங்க ரிசைமிகு மிறகு சேரி
யென்னுநற் பதியில் யார்க்கு மெண்ணிய யாவு நல்க
மன்னுநற் கோயில் கொண்டு மந்திர மூர்த்தி நாமந்
தன்னுடன் வாழுந் தந்தி தாளிணைக் கன்பு பூண்டோன். (உ)

சீர்மிகு தேவ கோட்டைத் திருநகர்ச் சிறந்து வாழ்வோன்
கார்நிகர் வண்மை மிக்கோன் கற்றவர் சுற்றங் காப்போன்
ஏர்திகழ் கல்விச் செல்வ மிலங்குறுஞ் சாமி நாதப்
பேர்திகழ் வணிகர் கோமான் பெற்றதா யினுமன் பார்ந்தோன்
(௩)

மந்திர மூர்த்தி நாம வாரண முகத்தோன் மீது
சந்ததம் விளங்கும் பிள்ளைத் தமிழ்புக லென்று சாற்றத்
தந்திரம் வல்லோர் வாழுந் தாமரங் கோட்டை யென்னுஞ்
சுந்தர நகரில் வாழ்வோன் சொன்மழை பொழியுந் தோன்றல்.

முத்தமி ழுணர்ந்த ஆறு முகப்பெயர் புனைவோ னான
வுத்தமக் குரிசின் மைந்த னுலகறி புலமை வாய்ந்தோன்
கத்திய நூல்க ளாக்கிக் கடல்புவி யினுக்குத் தந்தோன்
சத்திவேல் நாம னுற்றூர்த் தாங்கிடுந் தரும சீலன். (ரு)

பூம்பொழில் சூழ்ம ருங்கா புரிச்சமத் தான வித்வான்
தேம்பொழி மதுரப் பாடல் செய்திடுந் திறமை மிக்கோன்
காம்பன தோளார் வஞ்சக் கண்வலைப் படாத தூய
ராம்பெருந் தவத்தோர் போற்றும் அறுமுகக் கடவுட் கன்பன் (சா)

பாரத மித்தி ரப்பேர் படைத்தபத் திரிகை யாதி
சூரறு சுதர்ம நாமத் தூய பத்திரிகை யின்ன
நேருற நடாத்தி நன்மை நிலவுல கினுக்குத் தந்தோன்
சூரணி மதிக்கும் பிள்ளைத் தமிழ்த்தனி நூல்தந் தானே. (எ)

பேசுசொற்பொருளினிக்கும்பெருஞ்சுவையுடன்முன்யாத்த
காசினி யிறைஞ்சும் பிள்ளைக் கவிப்பிர பந்தந் தன்னைத்
தேசுறு சுபானு மாசித் திங்களோ ரிருபான் மூன்றி
லாசறு பூச நாளி லமிர்தமாங் கடிகை தன்னில். (அ)

காவலர் புகழுஞ் செல்வங் கல்விசேர் நாமத் தாராம்
பூவலர் கற்ப நாட்டுப் புரந்தரன் போன்றுள் ளாரும்
நாவலர் குழாமுஞ் சூழ்ந்து நண்ணிய விறது சேரி
மேவுறுங் கணேசர் முன்னே விழைந்தரங் கேற்றி னானே. (கூ)

மேற்படி வேறு

தந்திமுகத் தெந்தைபிள்ளைத் தமிழ்வாழி
யவ்விறைவன் றளியும் வாழி
சிந்தையுவந் தாக்கியோன் வாழிநூல்
செய்வித்த செம்மல் வாழி
சந்தமிகுந் திடுந்தேவ கோட்டைநகர்த்
தனவணிகத் தனதர் வாழி
யந்தமிழ்ப்பா வலர்வாழி யரங்கேற்று
சபைகுழுமு மறிஞர் வாழி. (ம)

---

தேவகோட்டை

ஸ்ரீமான் உ. ராம. மெ. சுப. சேவு. மெ.மெய்யப்ப செட்டியார்

அவர்கள் இயற்றியது.

---

நேரிசை வெண்பா.

சீரார் முனிவன் சிவஞானற் கொப்பாய்ப்பின்
பாரார் புகழ்ந்தேத்திப் பாராட்ட—வேராருஞ்
சத்திவேல் நாவலவன் சாற்றினன்பிள் ளைக்கவியைப்
பத்தியோ டைங்கரனைப் பார்த்து.

---

புதுவயல் நடராசபுரம்
தனவணிகச் செல்வரும், செந்தமிழ் வித்துவானுமாகிய
**ஸ்ரீமான். வெ. பெரி. வீர. சோமசுந்தரஞ் செட்டியார்**
அவர்கள் இயற்றியது.

---

நேரிசை வெண்பா.

மந்திரமே மூர்த்தியென வாழ்த்துமறை மீதமைந்த
மந்திரமா மூர்த்திதாள் வந்திப்பாம் — முந்திநினைந்
தோதி யடிதாழு முத்தமர்கட் கெஞ்ஞான்றும்
பூதியருண் மூலப் பொருள். (க)

எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

பொற்புறுந் தேவி குகனொடு மரசு
புரிதரு தமிழ்வளர் புராண
னற்புத வாடல் பலநிறை பாண்டி
யணிமிகு தேவையம பதியின்
முற்பதி யிறகு சேரிவாழ் மந்த்ர
மூர்த்தியை மும்முடிப் பரனைத்
தற்பரை யாகுஞ் சௌந்தர வல்லி
சாமிநா தனைத்தினம் பணிவாம் (உ)

நேரிசை வெண்பா.

பொன்னியன்சே ரன்வழுதி போற்றிறகு சேரிமிக
முன்னியமை மந்திரமா மூர்த்திக்கே — யுன்னியொரு
பிள்ளைப்பா மாலைசொலப் பேணியதே சத்திவேற்
பிள்ளைக்கு வாய்த்தபெரும் பேறு. (ங)

## எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

மனித்தரிற் சிலர்போன் மானிடர்ப் புகழா
வளம்பெறு புலமை மாண்பெனவே
யுனித்தின முனந்தாழ்ந் தெழுபவ ருளத்தி
னோங்குமந் திரக்கண பதிக்கே
யினித்தசொற் பொருளு முதுமொழித் திகழ்வு
மிசைதர நார்கொடு பிணைத்துத்
தனித்தமிழ்ப் பிள்ளை யலங்கல்சூட் டினனெஞ்
சத்திவேற் பிள்ளை வாழியவே. (௪)

முன்னமோர் முனிவ னுருவா கனற்கு
மொழிந்தனன் பருவமோ ரைந்தாய்ப்
பின்னைநல் விருகாப் பியமெனற் கெண்ணிப்
பிள்ளையைப் பாடுதற் கமைத்த
நன்னிய பஞ்சா லாத்திகன் சாமி
நாதனென் னலமிகு நண்பன்
றன்னினைப் பமைவோ பிரணவத் தேவன்
றன்றிரு வருட்டுணைப் பாங்கோ. (௫)

சத்திவேற் குளதாற் பிள்ளைக்கு மாகுஞ்
சாற்றுவ மெனநினைந் தமையோ
பத்திசே ரின்பப் பயன்றரு புலவர்
பண்ணிய புண்ணியப் பயனோ
நத்திவாழ் சுபானு மாசியி லீரேழ்
நவமதி நாளி னுவலர்க
ளுத்தமக் கவிதை யெனப்பரன் முன்ன
ருவந்தரங் கேற்றினன் மாதோ. (௬)

தருமையாதீனப் புலவரும்,
திருவையாறு அரசர் கல்லூரித்
தமிழ் விரிவுரையாளருமாகிய
வித்துவான் ஸ்ரீமத் இராம. கோவிந்தசாமிப் பிள்ளை அவர்கள்
இயற்றியது.

---

நேரிசை வெண்பா.

சத்திவேற் பிள்ளையெனுந் தண்டமிழ்ப்பே ராசிரிய
னெத்திசையு மேத்துமே ரம்பற்குச் — சித்திதரும்
பிள்ளைக் கவியென்னும் பேர்நூலைச் செய்தமைத்தான் (க)
வெள்ளை மதியொருவ வே.

சாமிநாத வள்ளற் றனவணிகக் கோன்வேண்டப்
பூமிசையி னற்றமிழ்நூல் போற்றிசைத்தான் — நாமிசையு
மந்திர மூர்த்தியெனு மாதங்கத் தானடிக்கு
மந்திரச் சத்திவேலெம் மன். (உ)

---

தேவகோட்டைத் தனவணிகச் செல்வர்
ஸ்ரீமான். க. முரு. கரு. ராம. சோம. இராமநாதன் செட்டியார்
அவர்கள் இயற்றியது.

---

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

வண்டமரும் பூஞ்சோலை வான்றவழ
விண்மடவார் மலர்கொள் சீர்த்தி
யெண்டிசையுங் கொண்டாடு மெழிலிறகு
சேரிநக ரினிதாய் மேவி

யண்டர்தொழ வீற்றிருக்கு மைங்கரன்மந்
திரமூர்த்திக் கன்பாற் றூய
தண்டமிழ்ச்சொல் லாய்ந்துபிள்ளைத் தமிழுறைந்தான்
சத்திவேற் சதுரன் குருவே.

---

ஸ்ரீ மந்திரமூர்த்தி விநாயகர் பிள்ளைத்தமிழ் நூலாசிரியரின்
குமாரரும், மாணாக்கரும் ஆகிய
வித்துவான் ச. செந்தில்நாயகம் பிள்ளை அவர்கள் இயற்றியது.

---

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

பூமேவு திருமகள்வா ழிமையா நாட்டப்
புத்தேளிர் நகரிதெனப் புகலற் பாற்றாய்க்
காமேவு பலவளங்கொள் தேவ கோட்டைக்
கவினுறவந் துதித்ததன வணிகச் செம்மல்
தேமேவு கொன்றையணி கடவுட் கன்பன்
றெருள்ஞானப் புலவரிடத் தருண்மா றுதோன்
நாமேவு பலகலைகள் பயின்ற தூய
நன்னடையன் புகழ்ச்சாமி நாதவள்ளல், (க)

தன்னகர்க்குக் குணபாலின் இறந்து சேரித்
தண்வாவிக் கரைதனிற்பொற் றளிகொண்டென்று
மன்னியருள் செய்தொளிரு மந்த்ர மூர்த்தி
விநாயகனெம் பெருமாற்கோர் பிள்ளைப் பாட

னுன்றுடைய நாவன்மை தோன்ற யாத்தே
யுரைத்திடுதி பாவலவென் விருப்ப மென்ன
வன்னவுயர் வாசகங்கேட் டெந்தை யாசா
னவனிபுகழ்ச் சத்திவேற் கவிஞ னன்பால், (உ)

மிக்கதமிழ்ச் சுவைநிறைந்த பாடல் கூற
மேதினியின் மாந்தரெலாம் வியந்து போற்றத்
தக்கதொரு சுபானுவினன் மாசித் திங்க
டனிற்றிகதி யிருபான்மூன் றெய்தும் பூசம்
பக்குவமாம் வளர்பிறைநற் சோம னாளிற்
பார்புகழும் இறகுநகர் முதல்வன் முன்பு
புக்கவுயர் புலவர்கள்சூ ழவையின் கண்ணே
புகன்றகவி யரங்கேற்றி மகிழ்ந்திட்டானே. (௩)

---

தேவகோட்டைத் தனவணிகச் செல்வர்

**ஸ்ரீமான். உ. ராம. மெ. சுப. சேவு. அ. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் இயற்றியது.**

---

சத்திவேற் பிள்ளையெழிற் றந்திமுகத் தைங்கரற்குப்
பத்திமே லோங்குபிள்ளைப் பாவதனைப் — புத்தமுதின்
நன்று யியற்றினா னிலத் தோரிதனை
யென்றும் வளர்ப்ப ரினிது.

---

தேவகோட்டைத் தனவணிகச் செல்வரும்,
இப்பிரபந்தத்தை இயற்றச்செய்து
அரங்கேற்றுவித்தவரும், சிவபக்தியாளருமான
**ஸ்ரீமான். சி கரு. ராம. சாமிநாதன் செட்டியார்**
**அவர்கள் இயற்றியது.**

---

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சீரார் பாண்டி வளநாட்டிற் சிறப்புற்
றோங்கு மணிமாடங்
காரார் தேவ கோட்டையெனுங் கவின்சேர்
நகரின் குணபாலிற்
றேரார் வீதி சூழிரத சேரி
வளரெம் மாமுகற்குப்
பாரார் பிள்ளைப் பாமாலை பரிவோ
டளிப்பா யெனவேண்ட, (௧)

ஷை வேறு

தாரணி தன்னின் மிக்க தாமரங்
கோட்டை வாழு
மாரணி சடையார்க் கன்பன் சத்திவே
லறிவன் சீர்சால்
வாரணி முலையாள் பெற்ற மந்திர
மூர்த்திக் கன்பாய்ப்
பேரணி யுற்ற பிள்ளைப் பிரபந்த
மளித்தான் மாதோ. (௨)

---

தேவகோட்டை
நகரத்தார் ஸ்ரீ மீனாக்ஷி வித்யா பரிபாலன சங்கம்
உயர்தரப்பள்ளி
ஸம்ஸ்கிருத பண்டிட், ஸாஹித்ய வேதாந்த சிரோமணி
**K. Y. ராமசர்மா அவர்கள் இயற்றிய**
**சாற்றுக்கவி.**

---

मन्त्रमूर्तिविघ्नराजबाललीलया कृतं
शक्तिवेल्विपश्चिता प्रबन्धरत्नमादृतम् ।
देवसालपत्तनस्य पूर्वदिग्विलासकृ-
न्मन्त्रमूर्तिसन्निधौ सभास्थितैश्च पण्डितैः ॥

மந்த்ரமூர்த்திவிக்னராஜபாலலீலயா க்ருதம்
சக்திவேல் விபச்சிதா ப்ரபந்தரத்நமாத்ருதம்
தேவஸாலபத்தநஸ்ய பூர்வதிக்விலாஸக்ருந்
மந்த்ரமூர்த்திஸந்நிதௌ ஸபாஸ்திதைச்ச பண்டிதை:
(௧)

मङ्गले शुभानुवर्षकुम्भशुक्लपुष्यगे
सोमवासरेऽधिरङ्गमादृतं निबन्धनम् ।
स्वामिनाथवैश्यवर्यकारितं ह्यभीष्टदं
रामशर्मणा नुतं विराजतां विवर्धताम् ॥

மங்களே ஸுபானுவர்ஷகும்பசுக்லபுஷ்யகே
ஸோமவாஸரேதிரங்கமாத்ருதம் நிபந்தனம்
ஸ்வாமிநாதவைச்யவர்யகாரிதம் ஹ்யபீஷ்டதம்
ராமசர்மணா நுதம் விராஜதாம் விவர்ததாம், (௨)

---

# தேவகோட்டை
# இலுப்பைக்குடிக் கோயில் ஐந்துவீட்டார்
# குலமுறை கிளத்தல்

---

இஃது
அமராவதி புதூர்
**ஸ்ரீமான் வயி.நாகரம் அ. இராமநாதன் செட்டியார்**
**அவர்கள் இயற்றியது.**

---

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சோணாட்டுக் காவிரிப்பூம் பட்டினத்தேழ் நகர்வணிகோத்
துங்கர் சிங்க
வாணாட்டுங் கொடிவீர விளைநரந்தக் கொடுங்கோனா
டகன்று தென்னர்
வானாட்டிற் குடியேறி யிளையாற்றங் குடிவாழ்ந்தார்
வந்து பின்னர்க்
கோனாட்டார் புகழ்சூடா மணிபுரத்தார் தனித்திலுப்பைக்
குடிசேர்ந் தாரால். (க)

குளங்கட்டிப் பிள்ளையார் கோயில்கட்டிக் கிணறுகட்டிக்
கூவங் கட்டி
யுளங்கட்டிச் செட்டாக வாழ்நாளிற் குறும்பரெலா
மொன்றாய்க் கெட்டித்

தளங்கட்டி மதிலுள்ள கோயிலெலாம் புதுந்தோன்றுய்த்
தடங்கல் கட்டி
விளங்கட்டிச் செயுங்கலக மிகப்பெருகப் பலப்பலவூர்
மேவி ஞரால். (உ)

களங்குடிகொள் விட்முடையான்வடிவுடையான் மணவாளன்
கமலப் பூந்தா
ளுளங்குடிகொள் வார்மாந கரிகம்ப ஹூர்தளக்கா
வூரூர் சங்கங்
குளங்குடிகொள் கரைகளிலு மடைகளிலும் படிகளிலுங்
குமுறு கின்ற
வளங்குடிகொள் ளிளங்குடியின் மகாகாளர் குடியாகி
வாழ்ந்தார் மன்னே (ங)

வன்னியருங் கள்ளர்களு மறவர்களு மரசுநிலை
வகுத்துத் திமை
துன்னியபல் குறும்பரையுங் கண்டகண்ட விடமெல்லாந்
தொலைய விட்டி
மன்னியவா லயங்களெலாந் திறந்துபூ சனையென்றும்
வழாது செய்ய
முன்னியசமாதானந் தேசமெங்கு நேசமிக்கு
முழங்கிற் றம்மா. (ச)

கேட்டையெல்லா மொழிந்தவிந்தப் பெரியாரை நல்வினையூழ்
கிளரித் தேவ
கோட்டையெல்லா மரசாளுங் குறிப்புமிக விருத்தலினற்
கோடாச் செங்கோல்

நாட்டையெல்லாங் காவல்செயுஞ் சேதுமன்னர்
நெடுங்குடைக்கீழ் நண்ணி வாழக்
காட்டையெல்லாம் வெட்டியிருள் கடிந்திரவி சேரியினைக்
கண்டார் மன்னே. (ரு)

சத்தியமோர் கணப்பொழுதுந் தவருத மாந்தரையே
சார்ந்தெந் நாளு
நித்தியமா யிலக்குமிகள் வாழ்ந்திருப்பா ரென்னுமொழி
நிலைக்கும் வண்ணந்
துத்தியமாய் பெய்யப்ப னெனுநாமக் குலமுதல்வன்
ருேன்றி நின்ருன்
மெத்தியவன் ருன் மைந்தன் கருப்பனென்பான் கதிரவன்போல்
விளங்கி னுல் (சு)

தெருப்பொன்ரு னிறையிரவி சேரியினில் வாழ்க்கையினிற்
சிறப்புற் ருேங்கிக்
கருப்பநா யகன்சைவங் கடைப்பிடித்தில் லறம்புரிந்து
களிக்கு நாளில்
விருப்பனு கியவருணு சலன்முருகன் வினைதீர்த்தான்
மேதி னிக்கோ
ருருப்பரிதி நேர்முத்து ராமனென நால்வர்மைந்த
ருதித்திட் டாரால். (எ)

தக்கவரு ணுசலன்மைந் தன்ராம நாதன்முதற்
ருரம் பெற்ருள்
புக்கவிளை யாளிலக்கு மணனென்பா னைப்பெற்ருள்
புகழ்சா றந்தை

பக்கமுள சோதரர்மூ வருக்குமிரு மக்களுக்கும்
பங்கஞ் சாக்கி
மிக்கபுவி யோர்போற்றப் பாண்டவர்போல் வாழ்ந்திருந்தார்
விளங்கி மாதோ. (அ)

மந்திரமூர்த் திக்கணே சருக்குயர்ந்த திருக்கோயில்
வகுத்து வட்டச்
சந்திரன்போ லமுதமிக வூற்றெடுப்பத் திருக்குளமுந்
தாபித் தேத்திச்
சுந்தரமா யிரண்டுசிலை குலமுதல்வர் தமையெடுத்துத்
தூக்கி நாட்டி
யிந்திரன்போ லிரவிசே ரியிற்பலநாள் நெடுவாழ்வுற்
றிருந்தா ரன்னோர். (௬)

நந்தமுத்து ராமன்வழி வந்தகிருட் டினகருப்ப
ராம சாமி
தந்தகருப் பன்மைந்தன் சாமிநா தன்றனையு
மைந்து வீட்டா
ரெந்தவகை யினுமறையா தென்றுமிருந் திடவேண்டு
மென்ற வெண்ண
முந்தவதற் கெந்தவகை செயவேண்டு மெனப்பலநா
ளுன்னி னுறைல். (௯)

அவியரசர் பாடல்பெறூர் மண்மலைசாம் பற்குன்ற
மநேகங் காண்போம்
புவியரச ரென்றாலு மிரந்துண்பா ராலும்
புலமை மிக்க

கவியரசர் பாடல்பெற்று ரென்றுமறை யாரென்றுங்
கவிஞர் நீள்கட்
செவியரசர் பணுமுடிமே லுயிர்மணியா யிருப்பரென்றுந்
தேறி மாதோ. (கக)

மாமரமும் பலாமரமும் வாழையின முஞ்சேர்ந்து
வளருஞ் செல்வத்
தாமரங்கோட் டையில்வாழுஞ் சத்திவேற் பெயர்க்கவிஞன்
றன்னை நோக்கிச்
சாமரம்போற் செவியுள்ளமந் திரமூர்த்திக் கொருபிள்ளைத்
தமிழ்ப்ர பந்தம்
பூமரம்போற் பாடுகெனக் கற்பகப்பூம் பொதும்பரெனப்
புரிந்திட் டானல். (கஉ)

அந்தப்பிள் ளைக்கவிக்கென் விருத்தகவி சாத்துகவி
யளிப்பா யென்றென்
சொந்தப்பிள் ளையைநிகர்த்த சத்திவேற் பிள்ளையன்பிற்
சொல்லக் கேட்டுக்
கந்தப்பிள் ளையைவேண்டிக் கிளிப்பிள்ளை மொழிக்குமந்தி
கட்டத் தோன்றுந்
தந்தப்பிள் ளைப்பிறைபான் ருள்பணிந்திச் சாத்துகவி
சாற்றி னேனல். (கங)

புரவியோ ரேழினையும் பூட்டியிரு ளோட்டியெங்கும்
புலர வைக்கு
மிரவிசே ரியினெடுநா ளிருந்துதங்க ளினத்தார்க
ளெல்லாம் வந்து

பரவியுயர் தேவகோட்டைப் பதியிற் குடியேறும்-
பண்பை நோக்கித்
திரவியமிக் குளவிந்தக் குலத்தாரு மங்ஙனம்போய்ச்
சேர்ந்தார் மன்றோ. (கச)

தந்தமுகத் தொடுமிருந்து தராமுகமெல் லாம்போற்றத்
தக்க முன்றோன்
சந்ததமுங் கந்தமலர் மாலைசெறிந் தமுகுவெள்ளந்
தழைந்து நிற்ப
நந்தவனம் நாற்றைம்ப தாண்டின்முன மியற்றினரேல்
ஞாலம் போற்று
மிந்தநெடும் பெருங்குலத்தோ ரெய்தியகீர்த் தியையாரே
மியம்பு வாரே. (கரு)

சீராரு நிழலிலுப்பைக் குடிக்கோயின் மிகவிளமை
சிறப்புந் தோங்க
வேராரு முயர்கருப்பக் கிரகமுதற் றிருப்பணிக
ளியற்றிப் பற்ப
லாராரும் புகழ்ந்திடக்கும் பாபிஷே கமுஞ்செய்தா
ருயர்வொப் பில்லார்
பேராரு மிக்குலத்தோ ரெனில்யாரே யளவெடுத்துப்
பேசு வாரே. (கசு)

தொண்டியினிற் சத்திரம்வைத் தந்தணர்க்கு மிரவலர்க்குந்
துளக்கம் வாரா
துண்டியிலோர் குறைவின்றி விளை நிலங்கள் பலவாங்கி
யுதவி யன்பாற்

கண்டியினிற் போய்ச்சிவா லயங்கட்டி நிபந்தங்கள்
களித் திந்தோங்கு
மெண்டிசையு மிருதிசையும் புகழுமிந்தக் குலப்பெருமை
யிசைக்கற் பாற்றோ. (கஎ)

மறந்தாங்கி யறியாத பெருங்கற்புக் கரசிமிக்க
வளப்பம் வாய்ந்த
வறந்தாங்கி நாச்சியார் மணவாளன் சிவகெங்கை
யரச னானோன்
புறந்தாங்கும் பொதிசோறுண்ணன்றிக்கா யிரண்டூர்கள்
புவியோர் போற்ற
நிறந்தாங்கி வாங்குகருப் பனுமிந்தக் குலமென்றால்
நிகழ்த்தற் பாற்றோ. (கஅ)

திருத்தமிலா நெடுங்கோட்டுக் கருமேதி யாழ்ந்தவயற்
சேற ளாவி
வருத்தமுறீஇச் சேலெல்லாங் கரைபுரள்வான் குளங்கலக்க
வாளை தென்னந்
தருத்துளிப்பாய்ந் திளநீரின் குலையொடிக்குங் காரைக்காற்
சமீப மான
திருத்தெளிச்சே ரியுஞ்சேவ வகைப்பணியிக் குலப்பெருமை
செப்பற் பாற்றோ. (கக)

நாவாலுஞ் சொலமுடியா மனத்தாலு நினைக்கொண்ணு
நலமே வாய்ந்த
கோவால யர்புனல்வா சலிலமைத்துப் பால்கறந்து
குளிர வாட்டித்

தேவாதி தேமகிழ ராமவரு ணுசலப்பேர்ச் செம்மல்
செய்தான்
பாவாண ரேத்தெடுக்கு மிக்குரிசில் பெருமையெலாம்
பகரற் பாற்றே. (உ௰)

செழிக்கின்ற பொழிற்பூந்தேன் சிற்ருருய்ச் சேர்ந்தோடித்
தினமோ யாமற்
சுழிக்கின்ற காவேரி யாற்றுக்குத் தென்கரையிற்
சோதி யாகி
விழிக்கின்ற கண்கொண்டு தெரிசிப்பார் பாவமெலாம்
வெருட்டி யோட்டித்
தெழிக்கின்ற சிவபுரமு மிலக்குவனுர் பணியிதன்சீர்
செப்பற் பாற்றே. (உக)

திடம்புரியுந் தருமமிகுந் தேவகோட் டையினகரச்
சிவால யத்தி
னடம்புரியும் பெருமானைப் பிரதிட்டை புரிந்துவிழா
நடத்திச் செம்பொற்
குடம்புரியு மாறபிடே கமுங்காணு முருகப்பன்
குடும்ப மேலாம்
இடம்புரியும் விலாசத்தா ரியற்றிறு ரெனிற்பிறிதென்
னிசைக்கு மாறே. (உஉ)

வினுக்கா ணுருனுச் சினுத்தா ணுத்திருநெல்
வேலிக் குட்போய்த்
தானுய்ச் சம்பாதித்துக் குருபூசை மடந்துவா
தசிம டம்பூந்

தேனுப்பாய் நந்தவனம் பசுமடமுந் தனதிலே
செய்தா னென்று
லானுப்பொற் கம்பிகெ ரிக்குலத்தின் பெருமையையா
ரளக்கிற் பாரே. (உ௩)

ஆழிவிட மருந்தியகுற் றாலலிங்கர் திருமேனி
யரைப்பங் காள்வாள்
வாழிதிருக் கோயில்சித சோமசுந்த ரன்நான்கு
வளரும் பங்கும்
வீழிசிறப் பிசவருணு சலனுருபங் குஞ்சேர்த்து
விளங்கச் செய்தா
ரூழிநெடுங் குலமென்று லிதன்பெருமை யாவரே
யுரைப்ப தம்மா. (உ௪)

ஆண்டவரா கியவெங்கள் கோயின்முத்து ராமலிங்க
வண்ணல் பாதம்
பூண்டவராய்ப் பெருந்துறவு பூண்டவரு ணுசலப்பேர்ப்
புனித வானுங்
காண்டகைய சிதம்பரநா மக்கருணு நிதியும்வையங்
களிக்க மாட்சி
நீண்டவராய்ப் பிறந்தனரே லிக்குலத்தின் பெருமையையார்
நிகழ்த்து வாரே, (உரு)

பலம்பெருகுந் திருவையாற் றினினந்த வனந்தண்ணீர்ப்
பந்த ரான
புலம்பெருகும் விழிகளிரண் டெனத்தளதிற் றனதனெனப்
புரிந்தான் மேன்மை

நலம்பெருகும் பீனுச்சா ருவருணு சலச்சுகுண
நண்ப னின்ருேன்
குலம்பெருகுந் துறவுசுவா மிகள்பேர னெனிற்பிறிதென்
கூறு மாரே. (உசா)

ஆளுடையார் கோயிலிலே சத்திரமுந் திருத்தேரு
மமைத்தம் மாரும்
தாளுடையார்க் காபரணம் வாகனங்கள் பலவளித்துத்
தணவா முத்தி
நாளுடையார் குருபூசை மடமியற்றி னுனெனுமண்
ணுமலைப்போர்க்
கேளுடையா னிக்குலத்தா னெனிலிதன்சீர் பிறிதென்னை
கிளத்து மாறே. (உஎ)

முத்துரா மன்செய்த வருத்தமெல் லாங்கூடி
முற்றுப் பெற்றுப்
புத்தமுதாய்த் திரண்டுயரண் ணுமலையா னெனப்பெயரும்
பூண்டான் றன்சேர்
புத்திமிகப் பெறுநாரா யணனிறைவற் கிருகண்ணும்
பறித்துப் பூசை
யுய்த்தனனு லிவனேவன் ஞெண்டனுல கத்துணெடி
தோங்கி னுனே. (உஅ)

விலக்கியசாத் திரப்பொருள்க ளனைத்தினையு மொரீஇச்
சைவம் விடாது பற்றி
யிலக்கியமு மிலக்கணமு மானகட னடுவணிழிந்
தெண்ணக் கண்ணுற்

கலக்கியமு தூற்றெடுத்துக் கரைகண்ட வன்றுண்டக்
கருணா மூர்த்தி
துலக்கியதோன் றினனென்று லிக்குலத்தின் பெருமையையார்
சொலவல் லாரே. (உகூ)

சேத்திரத்தின் மிகச்சிறந்த சிதம்பரத்திற் றிருநடனஞ்
செய்வான் செம்பொற்
பாத்திரத்தி லமுதுகொளப் பாவாடை விரித்துமிகப்
பழய பாக
சாத்திரத்தில் விதித்தவண்ணஞ் சர்க்கரைப்பொங் கலையர்த்த
சாமத் தீவான்
கோத்திரத்தின் மிகவுயர்சுப் பிரமணிய னிக்குலத்துக்
குரிசி லம்மா. (௩௰)

காவேரி யிருகரையும் பெருகுமா பூரத்திற்
கணக்கில் லாமற்
பூவேரி வண்டெல்லா முண்டுறங்கி மகரந்தப்
பொடிய ளாவிச்
சாவேரி யிசைபாடு நந்தவன மின்னேனே
சமைத்தான் வெள்ளைச்
சேவேறி வரும்பெருமான் றிருத்தோளின் மாலைமிகச்
சிறக்க மாதோ. (௩க)

கண்காட்டு நுதலுடையான் வெண்காட்டுப் பெருமான்பக்
கத்து வாழும்
பண்காட்டு மொழியாட்குப் பாலால யஞ்செய்தான்
பண்பு மிக்கான்

மண்காட்டும் பொறையுளசுப் பிரமணியன் பிறந்தஇந்த
வம்ச மென்றாற்
றண்காட்டு மிக்குலத்தின் பெருமையையார் கண்டறிந்து
சாற்று வாரே. (௩உ)

மேற்படிசொன் முன்பழங்கோ யிலைப்பிரித்துக் கருங்கல்லால்
விளங்கச் சிற்ப
நூற்படிசற் றுங்குறையா தழகுபெறச் செய்தமிக்க
நோன்மை யாளர்
நாற்படிதங் தையிலுயர்ந்த வேங்கடா சலன்சாமி
நாத னென்பார்
பாற்படியுங் கடற்பிறந்த முத்தின்வந்தார் பெருமையெம்மாற்
பகரற் பாற்றே. (௩௩)

தேசமிகும் புகழ்ச்சாமிமலைப்பெருமான் மேன்மிகவுஞ்
சிரத்தை பூண்டு
பாசமிகும் புல்லையெலாம் பறித்துவே ரொடுங்களைந்து
பண்ப டுத்தி
வாசமிகு மலர்சொரியு நந்தவனம் வானோங்க
வளர வைத்தான்
நேசமிகு நமதருமைச் சாமிநா தச்சுகுண
நிபுணன் றானே. (௩௪)

ஓருருஞ் சுற்றமுமற் றொருகுலமு மெங்நாளு
மொருவி னானைப்
பேருரெம் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலமே
பேணி னானை

நாரூரும் பசுமடம்வைத் தாட்டிடத்தோ முன்சாமி
நாதன் வைத்தான்
பேரூரும் பெரிதுடையா னிக்குலத்தா னெனிற்பிறிதென்
பேசு மாறே. (௩௫)

தம்மடிவந் தணைபுரிவார் தமக்கெளிவந் தருள்பரம
தயாளு வான
மும்முடிநா யகர்கோயிற் சங்கடத்தா னத்துலைந்த
முறைபொ ருது
செம்மறிமான் கரத்தாரை யெழுந்தருளச் செய்திரவி
சேரி சேர்த்து
மும்மடிகட் டியகிருட்டி னனுந்தோன் றிக் குலப்பெருமை
மொழியற் பாற்றே. (௩௬)

நிட்டையிலே யிருந்திறுகக் கண்மூடி மனத்தைநிலை
நிறுத்தி மாதர்
வெட்டையிலே கண்வாளில் வீழாமற் சயம்பெற்று
வீணே செத்துக்
கட்டையிலே சாம்பராய்ப் போகாமற் சமாதியிலே
களிக்குங் கூடற்
குட்டை யையா வென்பாரு மிக்குலத்தோ ரெனில்வேறென்
கூறு மாறே. (௩௭)

---

## வாழி விருத்தம்.

பஞ்சுமீட் டியபாத வுமைசுதன்மந் திரமூர்த்திப்
பகவன் வாழி
யிஞ்சிமீட் டியவிரவி சேரியுட னுருணியு
மினிது வாழி
யஞ்சுவீட் டினரென்பா ராயிரமா யிரம்வீட்டா
ராக வாழி
விஞ்சியிட் டியவன்னூர் தருமமெலாம் வாழியென்றும்
விளங்க மாதோ. (௩அ)

---

௨

திருவாமாத்தூர் கௌமார மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ தெண்டபாணி சுவாமிகள் பௌத்திரர்
ஸ்ரீமத் தி. செ. முருகதாஸ் பிள்ளை அவர்களால் இயற்றியது.

---

நேரிசை வெண்பா.

எத்திசையும் போற்று மெழிற்று மரங்கோட்டைச்
சத்திவேற் பாவலவன் சாற்றினன் — பத்தியுளோர்
மந்திரமூர்த் திப்பேர் வழுத்துமிற குச்சேரித்
தந்திமுகன் பிள்ளைத் தமிழ்.

தனவணிகச் சீல்னெறிற் சாமிநா தப்போர்க்
கனமுடையோன் வெஃகல் கருதி—பனமிசைந்து
சத்திவேற் பிள்ளையன்பாற் சாற்றியபிள் ளைத்தமிழ்நூல்
பத்தியுளோர் கொள்வர் பரிந்து.

## சந்தக்கவி

தந்தன தத்த தாத்தன தய்யத் தனனு
மண்புல வர்க்கு நேத்திரம் ஒல்லக் கொளலே
மன்பதை செப்பி வேட்பன எய்தத் தகுமே
திண்பயில் சித்த ஆத்திகர் கையிற் புகுமே
செங்கதி ரிற்பல் சீர்த்திகள் கொள்ளுச் சிதநூல்
விண்புல வர்க்கு மாட்சிமை நலகிப் புகழே
மிஞ்சமு தத்தின் மேற்சுவை விள்ளப் பெறுமே
வண்பெறு சத்தி வேற்கவி சொல்பொற் பிறகூர்
மந்திர விக்கி னேச்சுரர் பிள்ளைத் தமிழே.

———

உ

சிவமயம்

## தேவகோட்டை இறகுசேரி

# மந்திரமூர்த்தி விநாயகர் பிள்ளைத்தமிழ்.



### விநாயகக் கடவுள்.

மணிகொழிக் கின்றதிரை யாழிசூழ் புவிவாணர்
வானவர்கண் முனிவர் சித்தர்
வலாரிபிர மன்றிகிரி வலவனுதன் மீதுவிழி
மருவுருத் திரர்மி குந்த
திணிகொள்பா தலவுரகர் பணியவவர் குறையெலாந்
தினகரற் கெதிர்கொள் பனிபோற்
றீர்தரப் பேரருள் புரிந்துகாத் தருள்பத்
திருமுகங் கொண்ட தலைவா
கணிகொணின் னருள்வேண்டி னேன்றேவ கோட்டையிற்
கருதுகுண திசையி னுற்ற
கவினிறகு சேரியூ ருணியின்மேற் புறமருவு
காட்சிமிகு தளியின் மேவு
மணிகொடிரு மறையினுட் பொருளாகி யகிலாண்ட
மனைத்தினுந் திலத யிலனே
ராமென்ன வுற்றமந் திரமூர்த்தி நின்பிள்ளை
யணிதமிழ்க் கவித மையவே.



## க. காப்புப் பருவம்.

### திருமால்.

திங்கள்வெண் பிறையிதழி திகழ்கின்ற செஞ்சடைத்
தேவதே வன்ப யந்த
செல்வனைப் பூதரங் கட்கிறைவ னுயர்தவத்
திடைவந்த கருணை பொழிகண்
மங்கையுமை யுதரம்வா யாதுதவு பாலனை
மறைபரவு கும்போ தர
மந்த்ரமூர்த் திப்பெயர்கொ ளோங்கரப் பிள்ளையை
மனமகிழ்ந் தினிது காக்கச்
செங்கமல மலரால யத்துநின் றருளிர்செழுந்
திருமாது மகிழ்மார் பனைத்
திகிரிவா டண்டுகோ தண்டம்வா ரணமிலகு
செங்கரத் தவனை மடுவிற்
பொங்குசின வெங்கரா வாய்ப்பட்ட சிந்துரப்
பொதுவொலிப் புலம்பல் கேளாப்
போந்தாழி தொட்டுடன் காத்தமுகில் வண்ணனைப்
புந்திவைத் தேத்தல் செய்வாம். (க)

---

### சிவபெருமான்.

வேறு.

பருதி மதிகனல் விழிக ளெனமுகப்
பதும மதனிடை யுடையவெள் ளேற்றினர்
பகரு மரதன மணிபொ னுருவிடைப்
பசிய மரகத வுமையொரு கூற்றினர்
பணியொ டொளிர்சிறு பிறைம தலைசெறி
படர்ச டையினுற வணிதரு மாற்றினர்
பவள வரைசெறி மதிகி ரணமெனப்
பருதி புரைவடி வொளிருப்வெண் ணீற்றினர்

கருதி வழிபடு மடிய ருறுகுறை
கடிது பொடிபட வருடரு பேற்றினர்
ககனர் புவியின ருரகர் பலரறி
கலைநன் மறையினை யெழிலுறச் சாற்றினர்
கமல மிசையுறு பிரம குமரர்கள்
கருது மனமய றெளிவுறத் தேற்றினர்
கரிய விடமொளிர் களவ மலனிரு
கழல வடிமுடி யுளமுறப் போற்றுதும்
சுருதி முதலுறு மரிய பிரணவ
சொருப னடியவர் குறையது போக்கிய
சுரர்கண் மகிழ்களி றுமுக முடையவ
சுரனை வலிகெட நொடிமுடி வாக்கிய
சுவைய வதிரச குளக திரளிரு
துளைய கரனிடை யுணவது தூக்கிய
சொலும சரசர வுயிரொ டுலகினைத்
துகளில் கருணையி னுதவுசி லாக்கிய
தருதி னதரு ளெனமு னுவர்வினை
தகர வடிமல ரருள்கொடு நீக்கிய
சலச லெனவரு கலுழி யெனவழி
தருமு மதசல மவைநிறை வாக்கிய
தரும விடைமிசை யரனொ டுறையுமை
தருகு மரனிப முகமுறு பாக்கியன்
றருவி றருநக ரிலகு தளியுறை
சமர குருபரன் றமயனைக் காக்கவே.(௨)

---

## உமையம்மையார்.

வேறு.

அண்டகோ டிகளையு மவற்றின்வா ழுயிர்க்கண
மனைத்தையும் படைத்தவ் வுயிர்க

ஏகமகிழ்ந் தினிதுண்டு வாழுமீ லோற்பலத்
தைவென்ற வெழில்கொ ளுருவு
கொண்டருள் கொழிக்கும்விழி யானேக்கி நறைமலர்க்
கொன்றையணி செஞ்ச டைமுடிக்
குன்றவில் லியின்வாம மேவம்மை யின்பதக்
கோகனக மலர்து திப்பாந்
தண்டரள மணிகொழிக் கின்றதிரை யாழிகு
டரணியா டுரிய னவர்
தம்மொடு பகைத்தசரி தத்தையுயர் மேருவிற்
றழைத்தருள் கதித்தெ ழுந்து
பண்டெழுது மொருகொம்பொ டிருபதங் கண்மூன்று
பகருநால் வாயைங் கரம்
பரித்தவள மலியிறகு சேரிமந் திரமூர்த்திப்
பைங்களிற் றைக்காக் கவே. (௫)

---

## சுப்பிரமணியக் கடவுள்.

### வேறு.

பரவை மேவிய பாம்பணை மீதினிற்
றுயிலு மாயவன் பூந்தவி சேறிய
பகவ னுயிர மேய்ந்தக னுடனெடு முயர்தேவர்
பலரு நாடொறு மார்ந்திடு மேவலைப்
பரவி யேசெய வோங்குவ ராழியுட்
பருதி சூழும யேந்திர மாபுரி தனின்மேவி
யரவ வாரணி தாங்கிய வீசுர
னருளி னேபிர மாண்டமொ ராயிர
மதனை யாணையி னுண்டுயர் சூரனை முதலோடு
மயில தாலுடல் கீண்டுசு ராதிய
ரவல மானது நீங்கிட வேயரு
ளறுமு கேசனின் பூம்பத மார்வொடு பணிவோமே

விரவு சோலைய பூந்துணர் தாறுகு
விரைய மாநற வார்ந்துற வேவயல்
விளையு நீடரு பூம்பணை யானது புறமேவும்

வெளிய மாகொடி சேண்டிகழ் மாளிகை
மிடைகொ டேவையங் காண்டகு மாநகர்
மிளிறு சூரொளி தோன்றுறு மாதிசை தனின்மேய

விரத மேவிய பூந்தட மேபொலி
யிறகு சேரியில் வான்ஞெடு கோயிலி
னிலகு தாரணி மாந்தரின் மாவினை யதுதீர

விணையி லாவிழி யார்ந்திடு பேரரு
ளினிது மேவுற வோங்கலின் மாமுக
விறையை நாடொறும் பாங்குற வேபுரந் திடநாமே(ச)

---

## வைரவக்கடவுள்.

### வேறு.

மந்தா நிலத்தே ரினையூரு
மாரன் கரவில் லிணைமான
வளருஞ் சாலி விளைவேறும்
வயல்சூ ழிறகு சேரியுறை

தந்தா வளமா வதநமுறு
தலைவ னெழின்மந் திரமூர்த்தி
தன்னை நாளு மன்புடனே
சார்ந்து நின்று புரந்திடவே

செந்தா மரைமேல் வீற்றிருக்குந்
திசைமா முகனி னடுத்தலையைத்
திகழு முகிராற் கிள்ளிமலர்ச்
செய்யாள் கணவன் றனையடர்த்துச்

சிந்தா குலமுற் றவன்வீழச்
சிறந்த வுடற்றே லினையுரித்துத்
திண்ணம் புயம்போர்த் தியவடுகன்
றிருத்தாட் கமலஞ் சிரத்தணிவாம். (ரு)

---

## பிரமதேவர்.

வேறு.

களிகொண்ட பேரெழின் மஞ்ஞைதமை யின்றதன்
கலாபத் தினைவிரித்துக்
காதன்மிக வேடன மாடமுதிர் சூன்முகிற்
கணமேவ வான ளாவு
மளிகொண்டு நிலவுநந் தனவனம் புடைசெறிந்
தழகாரு மிறகு சேரி
யணிதளியி னிடைமேவி யருளுமந் திரமூர்த்தி
யாம்பறனை யினிது காக்க
வொளிகொண்ட பானுதய முற்றிடக் கண்டுமல
ரொண்கமல பீட மதன்மே
லூற்றுநால் வேதமலர் கின்றவாய் நான்முகத்
தொருவனைச் சகல வுலகும்
வளிகொண்டு வாழசர சரபேத வியமான
வர்க்கமும் படைத்த வெள்ளை
வாரிசத் தாண்மேவு செய்யதா லணையுளம்
வைத்தேத்தி யஞ்ச லிப்பாம். (சு)

---

## தேவேந்திரன்.

பண்ணுடு வரியளி மகிழ்ந்துணப் புனலாடு
பாவைநல் லார்மு கத்தைப்

பனிமதிய மென்ரும்பல் வாய்விள்ளும் வாவிகள்
பலசூழ வளகை நகரத்
துண்ணுடு பொருளெலா முறுதேவ கோட்டைநக
ரொருபாலின் மருவு மெழிலார்க்
தொளிரிறகு சேரியினி லுறையுபந் திரமூர்த்தி
யும்பலைக் காக்க வென்றே
விண்ணுடெ னச்சொல்பொன் ளுட்டையம ராவதி
வியன்கொணக ரத்து யர்ந்த
விரிந்தகற் பகநீழ னீலவரி யணையின்மேல்
வீற்றிருந் தரசு புரியுங்
கண்ணுயி ரங்கொண்ட வயிராணி கேள்வனைக்
கரியமுகி லேழூர் தியைக்
கந்தடரு மயிரா வதக்களிற் றனையுளங்
காதல்கொண் டினிதேத் துவாம். (எ)

---

## இலக்குமி, கலைமகள், துர்க்கை.

### வேறு.

பொன்னு டுறைவி புதர்முனிவர்
பொருவி லிசைகாந் தருவர்சித்தர்
போத மிகுமா தவர்யோகர்
புணரி துயிலு மரிபிரமர்
மன்னும் பிலமா ருரகர்புவி
வாண ருடனே கலந்துதொழ
மகிழ வருண்மந் திரமூர்த்தி
வரதைங் கரத்து மாமணியைத்
தென்னு ரிசைவண் டினமேவுஞ்
செந்தா மரைமே லரசிருக்குஞ்

திருமா மகளும் வெண்கமலச்
செழுமா மலர்மே லுலகர்தொழத்
தன்னு தரவின் விற்றிருக்குந்
தண்டாச் சிறப்பி னுமகளுந்
தறுகண் மகிடன் றனைக்காய்ந்த
சயமா மகளும் புரக்கவே. (அ)

---

## சந்தமாதர்கள்.

வேறு.

செந்தமுன் மகிழ்ந்துண்ட வென்புபெண் ணுகவுந்
திணியகற் கடன் மீதினிற்
சேர்ந்துடன் மிதக்கவுங் கராவுண்ட பாலனைத்
திகழ்தர வழைத்து மூங்கை
மூந்துற்ற பாவையைப் பேசவுஞ் செய்திட்ட
முதிர்சுவைத் தமிழ்பி றந்த
முதன்மைசேர் பாண்டிநாட் டிறகுசே ரியின்மந்த்ர
மூர்த்தியைங் கரதே வனைச்
சந்ததமு மறையனம் பினாகமிட பஞ்சத்தி
சவிதோகை யாளி கருடன்
றகுநாஞ்சில் பஞ்சா னநம்வச்சி ரங்களிறு
சாருமுத் தலைவேல் கடி
யந்தமுற வேகரங் கொண்டேறி யூர்கின்ற
வபிராமி முதல வழகா
ரணங்கெழுவ ரும்முளத் தார்ந்தன்பி னுடனென்று
மாதரவி னெடுகாக் கவே. (கூ)

---

## முப்பத்துமுக்கோடி தேவர்.

வேறு.

செந்தேன் பிலிற்று கின்றவெழிற்
றெய்வக் கஞ்ச மலர்பொதுளுந்

திருவார் தடம்வாழ் தரும்வாளை
சேணிற் பாய்ந்தி லாங்கலியின்
மூந்தார் குலையி னிடைமோதி
முதிர்மூப் புடைய கனியுதிர்க்கு
முருகா ரிறகு சேரிமந்த்ர
மூர்த்தி வேழ முகத்தேவை
வந்தா தரவின் செழுங்கிரண
மருவா தித்தர் பன்னிருவர்
வன்னி விழிநெற் றியிற் படைத்த
மதிருத் திரர்கள் பதினொருவர்
நந்தா வளஞ்சால் வசுக்களெண்மர்
நலமே வுமருத் துவரிருவர்
நாளுந் தழைத்த நட்புடனே
நன்று மகிழ்ந்து புரக்கவே. (๗)

காப்புப் பருவம் முற்றிற்று.

---

## உ. செங்கீரைப் பருவம்.

வண்டாடி நறையுணுந் தண்டா மரைப்பூவின்
மன்னுதிரு முகமெடுத்து
வாள்விழி களிப்பவெதிர் நோக்கிநன் முழந்தாண்
மடங்கமுன் மண்டி யிட்டுப்
புண்டரிக மலர்குப் புறப்பூவி லுற்றெனப்
பொலிதரு கரங்க ணிலமேற்
பொருந்தவுன் றிக்கயலி னருண்மழை பொழிந்துலகு
போற்றும் பிராட்டி யிருகண்

கண்டுகளி கூர்ந்திடச் செவிலியர்தம் முள்ளங்
களித்தோங்கு காத லோடுங்
காணவய னரியிருவர் காணாத முடியடிக்
கண்ணுதற் கடவுண் மகிழத்
திண்டிறன் மிகுந்தமந் திரமூர்த்தி விநாயகா
செங்கீரை யாடி யருளே
திருமருவு பெருவளத் திறதுசே ரிப்பிரான்
செங்கீரை யாடி யருளே. (க)

கன்னலன் றிதுசெந்நெ லென்றுள மயங்கிமுன்
காணவொளிர் மருத வைப்பிற்
கமலமலர் மேய்கவைக் கான்மேதி மடியிடைக்
கருவராற் றுள்ளி முட்டத்
தன்னிளங் கன்றெனச் சொரிசுவைப் பால்கால்க
டன்னிடைப் பெருகி யோடிச்
சாலியம் பைங்கூழ் வளர்த்திடும் பெரும்வளந்
தழைத்தோங்கு பாங்கர் சூழ்ந்த
மின்னலுறை முகிலினந் துன்னுவரை யெனவெண்ணி
மேவிப்ப டிந்து றங்கும்
வெண்சுதைத் திருமாட மலிதேவ கோட்டையின்
மிளிர்பூர்வ திக்கி லுற்ற
சென்னியறு கணியுமந் திரமூர்த்தி விநாயகா
செங்கீரை யாடி யருளே
திருமருவு பெருவளத் திறதுசே ரிப்பிரான்
செங்கீரை யாடி யருளே. (உ)

செந்தாதி னிற்பொலிந் தொளிர்கொன்றை மலர்மாலை
தெள்ளுநீர்க் கங்கை யரவு
திகழ்சடா முடிமீது மேவுமவெண் டிங்களஞ்
சிறுபிறைக் கீற்றை நோக்கி

முந்தாணை முகவசுர னைக்காய்ந்த தன்னிற்ற
மூரிவெண் கோட தென்ன
முன்னரியது கைக்கொளும் விருப்புடன் றன்னெழின்
முகமுற்ற துணைக ளார்ந்த
நந்தா வளத்துதிக் கைநீட்டி நீட்டியே
நண்ணுமெதிர் தந்தை மகிழ
நன்றன்பு கொண்டுசிர மாடிடச் செங்கமல
நாயகன் றன்னை யொத்த
சிந்துரத் திலகமந் திரமூர்த்தி விநாயகா
செங்கீரை யாடி யருளே
திருமருவு பெருவளத் திறகுசே ரிப்பிரான்
செங்கீரை யாடி யருளே. (௩)

சங்காழி செங்கரங் கொண்டமா றங்கையாய்த்
தக்கன்மக ளாய்வ ரைக்குத்
தலைவனுயர் புதல்வியாய் வந்தகௌ மாரியாழ்
டண்கடற் றரணி தன்னின்
மங்கல மிகுந்தகற் கண்டுதேன் பாலென
வழுத்துசெந் தமிழ்பி றந்து
வளர்ந்தோங்கு வழுதிதிரு மகளாக வன்னிநடு
வந்துபொன் முடித ரித்துச்
செங்கரத் தொளிர்செழுங் கோருங்கி யரிசுமந்
திடுமா சனத்து மேவித்
திருமேவ வாண்டபாண் டியநாட்டி னுற்றிலகு
தேவகோட் டையை யடுத்த
சிங்கார மிக்கமந் திரமூர்த்தி விநாயகா
செங்கீரை யாடி யருளே
திருமருவு பெருவளத் திறகுசே ரிப்பிரான்
செங்கீரை யாடி யருளே. (௪)

வேறு.

இருணிறை வளியிசை புரிநற வயின்மல
        ரெழின்மிகு பொழின்மேவி
    யினிதுறு பிடியுடன் மனமிக மகிழ்வொடு
        மிலகுற விளையாடு
மருண்மிகு மதசலம் வடிதரு கரிவினின்
        மறைமொழி விணைநாடி
    வளர்தரு பணையென வொளிர்தரு கரமுற
        மறுகிட வதையீர்த்துத்
தெருண்மிகு முனிவா ரொடுமல கவர்மகிழ்
        செறிதர மறைசேரத்
    திகழுத னகடிற பிளவுற வகிர்தரு
        செயன்மலி கலிதீர
வருண்மிகு மந்திர மூர்த்தி யிளங்களி
        றாடுக செங்கீரை
    யழகுறு மிறகு சேரிபு ரிக்கிறை
        யாடுக செங்கீரை. (ரு)
பணிசிறு பிறைநதி யொளிர்தர நெறிதரு
        படர்சடை முடியவனும்
    பசியம ரகதமி தெனவுய ரெழிலுறு
        பனிமலை தருபவளுந்
தணிவறு பெருமகி ழுளமுற மகிழுகந்
        தழைதர பொலிவுடனே
    தனியருண் மழைபொழி தருவிழி மலரவை
        தகைபெற களிகொளவே.
மணிகிளர் தருபணி யிருபுற மொளிர்தர
        மரைமலர் புரைவதந
    மருவிய துளையுறு மொருகர மசைதர
        வழகுட னேயாரு

மணிதிகழ் மந்திர மூர்த்தி யிளங்களி
றாடுக செங்கீரை
யழகுறு மிறகு சேரிபு ரிக்கிறை
யாடுக செங்கீரை. (சு)

பரவையின் மிசைவரு பருதியி னொளியது
படவிதழ் விரிகின்ற
பசுநறை பெருகிய மரைமல ரதனிடை
பயிறரு திருமானூர்

திருமறை யுரைதரு மதிவல மிகவுள
திசைமுக னுயர்நாவிற்
றிகழ்தரு கலைமகண் முதலிய வெழிஃமிகு
செவிலியர் பலர்மேவுங்

கரமதின் மகிழ்வுட னுறைதர வடியவர்
கசிவுறு மனமோடுங்
கவின்மிகு மிருகர முடிமிசை யுறமிகு
கனிவுட னடிபோற்ற

வரன்மகிழ் மந்திர மூர்த்தி யிளங்களி
றாடுக செங்கீரை
யழகுறு மிறகு சேரிபு ரிக்கிறை
யாடுக செங்கீரை. (எ)

வேறு.

ஏர்மிறை செந்தா மரைநிகர் வதனத்
தெழிலார் கண்கூட
விமயவர் மலரோன் மாலறி யாச்சீ
ரிதய மிசைக்கூடச்

சேர்தரு மூவுல கோர்பணி தரும்பொற்
றிருவடி முடிகூடச்

செந்தமி ழின்மொழி கொண்ட பெருந்துதி
செவ்விய தால்கூடப்

பார்மிசை மேவிய மாமிடி திரப்
பகர்திரு வருள்கூடப்
பணிபவர் தம்மன மெண்ணிய தாய
பயன்றரு பொருள்கூடச்

சீர்திகண் மந்திர மூர்த்தி விநாயக
செங்கோ செங்கீரை
திருமிகு மிறகு சேரிக கர்க்கிறை
செங்கோ செங்கீரை. (அ)

மூசுறு மடியார் மனதுறு மின்னன்
முழுது மிரிந்தோட
முடிவில வாமவர் மேவிய வறுமை
முற்று மழிந்தோட

மாசுற மனதிற் கூடுமஞ் ஞான
மருண்டு வெருண்டோட
வளர்தரு கொடிய பிறவியின் மூல
மாகிய வினையோடப்

பாசமெ தென்ன வியம்புறு மும்மலப்
பகையு மகன்றோடப்
பலபல வாகிய பூதபை சாசப்
பயமு முடைந்தோடத்

தேசுறு மந்திர மூர்த்தி விநாயக
செங்கோ செங்கீரை
திருமிகு மிறகு சேரிக கர்க்கிறை
செங்கோ செங்கீரை. (கூ)

மங்கல மாநுதன் மேலணி சுட்டி
மலர்ந்தொளிர் தரவாட
வளியுற வசையிரு செவிமணி யணிகள்
வயங்கி யசைந்தாடப்
பொங்கிய வெழிலார் புயமிசை யணிபணி
பொற்பு நிறைந்தாடப்
பொன்வரை மேவிய மார்பணி தொங்கல்
பொலிந்து கலந்தாடச்
சங்கையி லடியா ருளமலர் பாதத்
தண்டை சிலம்பாடத்
தழையெழின் மேவிடை மீதுற் றொளிசெய்
சதங்கை கலந்தாடச்
செங்கவுண் மந்திர மூர்த்தி விநாயக
செங்கோ செங்கீரை
திருமிகு மிறகு சேரிநகர்க்கிறை
செங்கோ செங்கிரை. (ம)

செங்கீரைப் பருவம் முற்றிற்று

---

## ௩. தாலப் பருவம்.

தலமே ழுலகும் பாதலமுந்
தரணி தனிலும் வாழ்பவர்கள்
சார்ந்து பணிந்து கரமுகுளந்
தலைமேற் கொண்டு மறையுணரா
நலமே வியசீர்த் திருமேனி
நாடு மிருகண் களிப்புறவே
நன்று நோக்கி மனங்கசிந்து
நாவார் துதிகள் பலகூறப்

புலமே வியதிங் கினைப்போக்கிப்
புந்தி மகிழப் பலவராமும்
பொருந்த மாறில் பெருங்கருணை
பொழியுந் தனிநா யகவோங்கு
மிலமா ரிறகு சேரிநக
ரிபமே தாலோ தாலேலோ
வினிய வருண்மந் திரமூர்த்தி
யிறைவா தாலோ தாலேலோ. (க)

பண்ணி னலங்கண் மிகப்பெருகப்
பாடி மலர்வா யிலினிடத்துப்
படர்மென் சுரும்பிற் கிரவலர்க்குப்
பரிந்துண் ணறவின் னமுதளிக்குந்
தண்ணங் கமல மலர்த்தடமுந்
தவிமா மதின்மா ளிகையிடமுந்
தழைத்து நிறைந்த பெருவளங்கள்
சமைந்த தேவ கோட்டை யெனும்
விண்ணி னமரா வதிநேராய்
விளங்கு நகர்வை சியர்தன்னின்
விளம்பு மைந்து வீட்டினர்கள்
விழைந்து புரிந்த சினகரம்வா
ழெண்மே விறகு சேரிநக
ரிபமே தாலோ தாலேலோ.
வினிய வருண்மந் திரமூர்த்தி
யிறைவா தாலோ தாலேலோ. (உ)

பொழிதேன் மாரி யோவாது
பொருந்து மலராற் பொலிந்தோங்கும்
பொழில்சூழ் பொன்னித் திருநாட்டைப்
புவியோர் பரவ நெறிமுறையே

யழியாப் புகழி னரசுபுரி
யபயன் மகிழக் கரும்பிரதீ
மமுதிற் றேனின் முக்கனியி
னமைசா றதனிற் பெருமதுர

மொழியாப் பசிய தமிழ்மொழியா
லுலக முய்ய வொருமூவ
ருரைத்த தெய்வத் திருமறையை
யுள்ள மகிழ வுவந்தளித்த

வெழிலா ரிறகு சேரிநக
ரிபமே தாலோ தாலேலோ
வினிய வருண்மந் திரமூர்த்தி
யிறைவா தாலோ தாலேலோ. (௩)

மன்பா ரகத்து வளம்பலவு
மருவுந் திருமா ளிகைமீது
வனப்பார்ந் தமைசா லிடம்பரந்து
வயங்கு நிலாமுற் றத்தினிலே

யன்பார் மணிக்கந் துகமாடு
மழகார் மகளிர் நீத்தெறிந்த
வணிமா பணியின் மணிவீதி
யதன்க ணுடுவின் கணமானப்

பொன்பா ரிதுகொல் லோவெனவிண்
போகு முயர்சா ரணர்கண்டு
பொருந்து மானத் துடனிறங்கப்
பொலியுந் தேவை நகரடுத்த

வின்பா ரிறகு சேரிநக
ரிபமே தாலோ தாலேலோ
வினிய வருண்மந் திரமூர்த்தி
யிறைவா தாலோ தாலேலோ. (௪)

வேறு.

இந்துவெ னத்திகழ் வாண்முக மங்கைய
ரெழிின்மிகு மதிமதுரத்
தின்றமி ழுடனமு தூட்டி வளர்த்துள
விலகுப சுங்கிளிபொன்
சுந்தர வுலகொளிர் கற்பக தருவமர்
தூயசு கத்துடனே
சூழ்தரு நட்பு பொருந்த விருந்துயர்
சொற்றமிழ் தேற்றியத
னந்தமி குந்தவ மரர்மொழி தனையுறு
மடைவுட னேகற்றுள்
ளன்புடன் மீண்டம் மொழியினை யெவரு
மதிசய முறமொழியுஞ்
சந்தவி றகுசே ரிப்பதி முதல்வா
தாலோ தாலேலோ
தளிரடி மந்திர மூர்த்திவி நாயக
தாலோ தாலேலோ. (ரு)

விழைமலர் வாவியி னின்றெழு வாளைவிண்
மேலெழு தாழைமுடி
மீதினின் மோதிட வுதிர்முதிர் முப்புடை
மேவிய கனிசூதத்
துழையொளிர் கனிக ளுதிர்த்துப் புறமுள்
ளுறுபா கற்கனிதே
னொழுகக் கீண்டரம் பைக்கனி யின்குலை
யொடிதர நிறைவேழக்
கழையை முறித்திட வக்கனி சிதைதேன்
கரும்பிர தத்தினெடுங்
கலுழியின் விரவிப் பாய்தர மருதங்
கவின்மிக வுயர்செந்நெற்

றமையுமி றகுசே ரிப்பதி முதல்வா
தாலோ தாலேலோ
தளிரடி மந்திர மூர்த்திவி நாயக
தாலோ தாலேலோ. (சு)

சக்கர மேயதி ருக்கரன் மரையா
தனன்வா னுலகாளுஞ்
சதமக னுதிய வானவர் சூழுமித்
தனிமறை யொலிசூழெண்

டிக்கினி லாரவ ணங்கிக் கைமுடி
சேரவு ளன்புடனே
திகழ்நய னப்புனன் மருமத் துறஙின்
றிருமா முகநோக்கி

முக்கண வருளுதி யெனஙினை வரமருண்
முதல்வா ஙினதுதிரு
முகமலர் தரல்கண் டுமைமன முகிழ்வுறு
மூவுலகும் போற்றுந்

தக்கவி றகுசே ரிப்பதி முதல்வா
தாலோ தாலேலோ
தளிரடி மந்திர மூர்த்திவி நாயக
தாலோ தாலேலோ. (எ)

வேறு.

கடிமல ரணிபு யாசல வீசா
தாலோ தாலேலோ
கருதடி யவர்செய் பாவவி நாசா
தாலோ தாலேலோ

பிடிநடை யிமைய மாதரு டேசா
தாலோ தாலேலோ

பிறையணி சடிலன் றேளிடை வாசா
தாலோ தாலேலோ
படிபுக ழுருவ மார்பிர காசா
தாலோ தாலேலோ
பனிமதி வதந மேவுவி லாசா
தாலோ தாலேலோ
வடிபணி பவரை யாடரு நேசா
தாலோ தாலேலோ
வழுகுறு மிறகு சேரிக ணேசா
தாலோ தாலேலோ. (அ)

மறையுரை பொருள தாகிய நாதா
தாலோ தாலேலோ
மயிலியன் மகளிர் மேவுவி நோதா
தாலோ தாலேலோ
நிறைதரு படைய தாவுறு பூதா
தாலோ தாலேலோ
நிகரில வடிவ தாவொளிர் போதா
தாலோ தாலேலோ
கறைமன வசுரர் நாடுவி ரோதா
தாலோ தாலேலோ
கழலெழு மடிய ராடரு பாதா
தாலோ தாலேலோ
வறைதரு கருணை மேவிய தாதா
தாலோ தாலேலோ
வழுகுறு மிறகு சேரியின் வேதா
தாலோ தாலேலோ. (கூ)

திருவிரு வனிதை மேவிய பாகா
தாலோ தாலேலோ

சிவன்மகிழ் குமர ஞகிய வாகா
தாலோ தாலேலோ
தருவின னமரர் சூழ்தரு போகா
தாலோ தாலேலோ
தழையெழிற் பருதி போலொளிர் தேகா
தாலோ தாலேலோ
கருதின வருளு மாகுறு மோகா
தாலோ தாலேலோ
களிறுடை வதந மோடுறு மேகா
தாலோ தாலேலோ
வருமறை பரவ நேகநல் யோகா
தாலோ தாலேலோ
வழகுறு மிறகு சேரிநன் ஞகா
தாலோ தாலேலோ. (ம)

தாலப் பருவம் முற்றிற்று.

---

## ச. சப்பாணிப் பருவம்.

மங்கல மிகுந்தசெந் தாமரைத் தவிசின்மேன்
மருவுதிரு மகளும் வெள்ளை
வாரிசத் தும்வேத ஞவிலுந் தங்கும்வெண்
மைக்கலைப் பணிய ணிந்த
கொங்குவிரி தருமல ரணிகருங் கூந்தல்பொன்
கோமளக் கலைக்கு மரியுங்
குலவிமய மலையரய னுட்களி துளும்பவரு
கோகனக மலர்மி கர்த்த
பொங்கெழின் முகம்பாத மங்கரங் கொண்டசீர்ப்
புனிதமலை யும்ம ருங்கிற்

போதர வழைத்திடப் புரிதல்போற் றிருமுகப்
பொலிவுடன் செங்கை சேர்த்துத்
தங்கொலி பிறங்கிடத் தந்தா வளத்தேவ
சப்பாணி கொட்டி யருளே
சதுர்மறைகள் பரவிறகு சேரிமங் திரமூர்த்தி
சப்பாணி கொட்டி யருளே. (க)

கண்கொண்ட நுதலிளம் பிறைகொண்ட சடைவிடக்
கறைகொண்ட களமான் மழுஉக்
கனல்கொண்ட கைமலைக் கனிகொண்ட திருவுருக்
கடவுள்பே ரன்பு கொண்ட
பண்கொண்ட மறைகொண்ட வாய்ப்பதும மேற்கொண்ட
பனவனீ டரவு கொண்ட
பள்ளிதிரு மான்கொண்ட விரைதுழாய்ப் படலைமார்
பன்மல ருருமபு கொண்ட
வண்கொண்ட தருவினிழல் கொண்டமக வான்றேவர்
வாழ்வுகொண் டொளிர வவரை
மகிழ்மனங் கொண்டழைத் திடுதல்போற செங்கர
மலர்த்திவாண் முகமலர்ந்து
தண்கொண்ட கோடொன்று கொண்டதந் தாவளஞ்
சப்பாணி கொட்டி யருளே
சதுர்மறைகள் பரவிறகு சேரிமங் திரமூர்த்தி
சப்பாணி கொட்டி யருளே. (உ)

இந்தரவு நதியறுகு வன்னிகூ விளமத்த
மிதழிவெள் ளெருக்கி லங்கு
மெரிவணம் பெற்றசடை முடிமீ தணிந்தமா
விடபனருண் மறைநான் குட
னைங்தெனக் கொளவேத வியாதனுரை செய்தபா
ரதமதைக் கோடா யிர

மார்ந்தபொன் மேருவரை யேடதாத் தன்வெண்மை
யங்கோ டெழுத்தா ணியாச்
சுந்தர மிகத்திட்டு பங்கயத் தகவிதழ்ச்
சுவர்னவங் கரமெ டுத்துச்
சூழுமற் றக்கரத் தோடொற்றி யரனுமை
சுரந்துளங் களிது ளும்பச்
சந்ததம் பரவுவார்க் கருள்செய்தந் தாவளஞ்
சப்பாணி கொட்டி யருளே
சதுர்மறைகள் பரவிறகு சேரிமந் திரமூர்த்தி
சப்பாணி கொட்டி யருளே. (ரு)

கஞ்சமலர் மேலுறுங் கண்களிரு நான்குடைக்
கர்த்தனுந் திரைகள் செறிபாற்
கடன்மீது காகோ தரப்பாயன் மேவுசெங்
கண்ணனுங் கலாம்வி ளைக்கச்
செஞ்சடை யரன்சோதி மலையுரு வெடுத்திதன்
றிருமுடியை யடியை யறிவோர்
செப்புறுந் தலைவரென் றுடவன் னங்கோலத்
தின்னுருக் கொண்டு தேடி
யஞ்சியறி யாதுவலி குன்றிநின் றவர்பகைவ
ரானவசு ரேச ராதி
யப்புறத் தகல்கநும் வன்மைசெல் லாதென்
றகத்தறி வுறுத்தல் போலத்
தஞ்சமென் பார்க்கருள்செய் கின்றதந் தாவளஞ்
சப்பாணி கொட்டி யருளே.
சதுர்மறைகள் பரவிறகு சேரிமந் திரமூர்த்தி
சப்பாணி கொட்டி யருளே. (சு)

வேறு,

அளிமிடை தருமல ரணிகுழன் மகளிர்க
ளன்புட னேகூடி

யழுகிய கயல்விழி களிகொள முகமதி
யந்தனி லேமேவுந்
தெளிதரு மமுதென வுரைதரு மொழிபயில்
செங்குவ ளைப்போதிற்
றிருமிகு மணிநகை தெரிதர விருகரஞ்
சேர்ந்திட வேகாட்டிக்
களிமிக வருகவ ருகவென வுரைசெயக்
கண்டும கிழ்ந்தாடிக்
கவின்மிகு மவரிடை யடைதர விரையும
கங்கைம லர்ந்தேகும்
குளிர்பொழில் வளர்சிறை புரியுறை மதகரி
கொட்டுக சப்பாணி
குவலய மடிபணி புரிதமங் கிரவிறை
கொட்டுக சப்பாணி. (ரு)

மறையுரை விதிதரு மலர்புவி முடிகொளு
மாசுண முடல்வாட
மதிதரு திசைகட கரிகட னுளமிக
மருண்டுவெ ருண்டோடக்
கறைதவிர் மனமுனி வரர்கண முளமது
கனிந்தும கிழ்ந்தாடக்
கமழ்தரு குழல்வனி தையர்மிகு மகிழ்வது
கலந்து மனங்கூட
நிறைதரு மமரர்க ளுளமகிழ் தரமுன
நிறைந்து தினம்பாட
நிகரறு நுதல்விழி யரனுமை யிவர்மடி
நிவந்து தவழ்ந்தாடிக்
குறைதவிர் வளமிகு சிறைபுரி மதகரி
கொட்டுக சப்பாணி

குவலய மடிபணி புநிதமங் கிரவிறை
கொட்டுக சப்பாணி, (௬)

மணமலி பொழின்மிசை யிளமதி வளமிக
மகிழ்ந்து தவழ்ந்தேற
மதுநுகர் தருமிசை வரிசிறை யளிமலர்
மணந்து நிறைந் தேறத்
தணவறு சலிலம துறுவய லுயர்கரை
சங்கம லிந்தேறத்
தமனிய வரையென நிலவிய மணிமுடி
தங்குறை முகிலேற
வணமிகு பலகொடி யிமயவர் தருவிடை
வளர்ந்து நிறைந்தேற
வளமலி மறையுரை தருசிவ சமயமுன்
வயங்கி வளர்ந்தேறக்
குணவடி யவர்நிறை சிறைபுரி மதகரி
கொட்டுக சப்பாணி
குவலய மடிபணி புநிதமங் கிரவிறை
கொட்டுக சப்பாணி. (௭)

வேறு.

அண்டர் தருக்களின் மண்டு துகிற்கொடி
யமைதரு மணிமாடத்
தஞ்சொன் மடப்பிடி யஞ்சுந டைக்கொடி
யணியிடை யவர்தாழுங்
கொண்டனி கர்த்தசு ருண்ட கருங்குழல்
குலவுமை முகிலாகக்
கொந்தள வஞ்சிறை கொண்ட மயிற்றிகழ்
குருமணி விழியாரக்

கண்டு நடம்புரி கின்ற வளம்பல
கருலிய வணிவிதி
கந்தமி கும்பொழி லென்று பலந்தரு
கவின்மிகு தருசேரி
கொண்ட திருத்தளி நின்ற செழுங்கயங்
கொட்டுக சப்பாணி
கொங்கு மலர்ப்பத மந்திர வைங்கர
கொட்டுக சப்பாணி. (அ)

திங்க ணிறைந்தொளிர் கின்றமு கம்பொலி
திருவுடன் மணிமேவுஞ்
செம்பொ னலங்கிள ரும்பொன் முடித்தலை
சிறந்தசை வுடனுரச்
சங்கம ணிக்குழை தங்கு பெருஞ்செவி
தழைவளி தரவாடத்
தண்டர ளத்தொடை கொண்ட வெழிற்புயந்
தகவுடன் மிகவாடச்
செங்கை மலர்க்கட கங்க ளிலங்கொளி
சிறந்திட வருண்மேவுஞ்
சிந்தை மகிழ்ந்தொளி ரங்கை மலர்ந்துமை
திருவிழி களிகூரக்
குங்கு மதிலகம் பொங்கு செழுங்கரி
கொட்டுக சப்பாணி
கொங்கு மலர்ப்பத மந்திர வைங்கர
கொட்டுக சப்பாணி. (கூ)

அண்டர்கள் புவிநிறை தொண்டர்க ளனுதின
மகமிக மகிழ்கூர
வங்கை முடித்தலை தங்க விழிப்புன
லகலம தறமேனி

கொண்ட முகிழ்ப்புள கங்கள் பொருந்தவுட்
குலவிய பரிவோடுங்
கும்ப முனித்தவன் முன்பு தருந்தமிழ்
கொழுவிய சுவைமேவுங்
கண்டி னினித்திடு கின்ற துதிப்பதங்
கனிவொடு முறைபாடக்
கண்டிரு விழிகளி கொண்டு மகிழ்ந்துயர்
கருணைய துறவாமங்
கொண்ட சிறைப்பதி தங்கு செழுங்கயங்
கொட்டுக சப்பாணி
கொங்கு மலர்ப்பத மந்திர வைங்கர
கொட்டுக சப்பாணி. (ய)

சப்பாணிப் பருவம் முற்றிற்று.

---

## ரு முத்தப்பருவம்.

வில்லைப் பழித்த புருவமணி
வெற்பைப் பழித்த தனபார
விமலை கயற்கண் மகிழ்ந்துண்ண
விருந்தூட்டெழிலார் கற்பகமே
யெல்லை யில்லா மறைபரவு
மினிய சோதி மணிவிளக்கே
யெண்ணு மடியார் குறைகளையு
மிலங்கு மெழிற்சிந் தாமணியே
செல்லைப் பழித்த கரியகுழற்
சித்தி புத்தி மகிழின்பே
திருவே யுண்ணத் தெவிட்டாத
தேனே வானோர் திருவமுதே

முல்லை யரும்பி னகைக்கனிவாய்
முதிரு முத்தந் தருகவே
மூலப் பொருண்மந் திரமூர்த்தி
முதல்வா முத்தந் தருகவே. (க)

சித்தர் முனிவர் தினம்போற்றுந்
தேவ தருவின் மலர்த்தேனே
திருமால் பிரமன் றனக்கருளுஞ்
செழுமா மறையி னுட்பொருளே
பத்தர் மனமா சிருணிக்கும்
பரஞா னத்துச் செழுஞ்சுடரே
பரமர் புரமூன் றெரிக்கவன்று
பக்கத் துணையாம் பெருந்துணையே
நத்திப் பணிவோர் தமைத்துன்ப
நாடா தருளு நாயகமே
நாளுங் கருணை ததும்புகின்ற
நயனக் களிறே யொளிபிறங்கு
முத்தி னிறைந்த நகைக்கனிவாய்
முதிரு முத்தந் தருகவே
மூலப் பொருண்மந் திரமூர்த்தி
முதல்வா முத்தந் தருகவே. (உ)

பனிசேர் வரையி னிறைபயந்த
பச்சைப் பசிய மயிலின்முன்
பரிவி னடைந்து விழிகளிப்பப்
பதுமத் திருவாய் தனைமலர்ந்து
கனியே கனியின் றனிச்சாறே
கண்டே பசுவின் சுவைப்பாலே
கரும்பின் ரசமே செழுந்தேனே
கவினுர் பாகே பாற்கடலிற்

றனியே தோன்றும் பேரமிர்தே
சார்வா யென்றென் றேமதுரந்
ததும்பக் கூறி யழைக்கவளர்
தனிமா மறைமுன் னுனகய
முனியே செய்ய கனிவாயான்
முதிரு முத்தந் தருகவே
மூலப் பொருண்மந் திரமூர்த்தி
முதல்வா முத்தந் தருகவே. (௩)

அந்திப் பிறைசேர் சடைப்பரம
னரவி னுடன்மேற் றுயிலண்ண
லலர்மே லவனிந் திரனமர
ருமா தவமார் திருமுனிவர்
சிந்தை மயறீர் தருசித்தர்
திசையின் முதல்வர் கணநாதர்
சேட னுரகர் கடல்சூழ்ந்த
திருவா ரிலங்கை நகராண்ட
சந்த முடிரா வணன்றரணி
தன்னை யரசு புரிதலைவர்
தக்க கலைவல் லவர்மற்றோர்
தலைசா லன்பி னுடனின்றே
முந்திப் பணிய வருள்கோவே
முதிரு முத்தத் தருகவே
மூலப் பொருண்மந் திரமூர்த்தி
முதல்வா முத்தந் தருகவே. (௪)

வேறு.

சொன்னல மிகுந்தவவ யவம்பெற்ற கற்புளத்
துற்றநூ மொழியிலங்கு

தொண்டைவாய்க் கெண்டைவிழி கொண்டமட வார்
தோன்று மெழின் முத்து மோங்கும் (கண்டங்

பன்னலம் பெற்றவான் பற்ருேன்று முத்தும்வான்
பசுங்கருங் கொண்டன் முத்தும்
படரொளி பரப்பிவா னிடைமேவி யொளிர்கின்ற
பான்மதியின் முத்து மாய
நன்னலம் பெறுமுத்து மிதல்ல வெங்கட்கு
நண்ணிடப் பெறுவ மொருகா
னண்ணிடற் கரியதா யறமாதி நான்கையு
நன்றளிக் கின்ற மேன்மைக்
கன்னலிர தந்தேற லெனவூற லூறுநின்
கனிவாயின் முத்த மருளே
கவினிறகு சேரிமந் திரமூர்த்தி நின்றிருக்
கனிவாயின் முத்த மருளே. (ரு)

வாரணத் தொடுசலஞ் சலமிப்பி யுயர்பூகம்
வளர்கதலி சாலி கன்னன்
மதியுடும் பராக்கராக் கொக்குமீன் றலைகழை
மழைமுகிற் கோவின் வாய்ப்பற்
ருரணி தருங்கருங் கூர்தன்மட வார்கண்டந்
தந்திகோ லத்து வெண்மை
சான்மருப் புயர்நளின மிவையெலாந் தருமொளி
தழைத்தோங்கு முத்தி னுக்குப்
பாரணிய வணிகர்மதி விலையுண்டு பழமறைகள்
பரிந்தோல மிட்டு மறியாப்
பயில்யோகர் மனமேவி யொளிர்கின்ற செய்யபூம்
பங்கயப் பாத மூல
காரணப் பொருளாகும் விலையிடற் கரியநின்
கனிவாயின் முத்த மருளே

கவினிறகு சேரிமங் கிரமூர்த்தி னின்றிருக்
கனிவாயின் முத்த மருளே. (சு)

பொன்னிலகு பூந்தடங் குடைந்தாட வருமகளிர்
பொலிமுகந் தன்னை யார்ந்த
பூரணக் கலைமதியெ னக்கண்டு சேதாம்பல்
பொன்பகன் மலர்ந்தார் தரூஉந்
தன்னிகரில் வளமிகுந் தேவகோட் டைத்திருத்
தகுநகரின் வாழும் வணிகர்
தக்கசம் பத்துற்று வாழுவந் நகர்பூர்வ
தனியெழிற் றிக்கின் மேன்மை
மன்னுமும் முடிநாதர் வளர்தளிப் பாங்குலகு
வந்தடி வணங்க வேண்டும்
வரமெலா முதவிவீற் றருள்கருணை வடிவுடைய
மதகய முகத்து மணியே
கன்னிபனி மலைவல்லி யின்பால னின்செய்ய
கனிவாயின் முத்த மருளே
கவினிறகு சேரிமங் கிரமூர்த்தி னின்றிருக்
கனிவாயின் முத்த மருளே. (எ)

வேறு.

அண்டரு முனிவரும் வந்தடி பணிதர
வருள்புரி யங்கணனே
யகிலமு மதினிறை பொருள்களு மாகி
யமர்ந்த செழுஞ் சுடரே
கண்டினு மதுரமி குந்தசொ லுமையவள்
காதல னுனவனே
கவின்மிகு சித்திபுத் தியர்தரு களிமகிழ்
காதலு கந்தவனே

தண்டமிழ் வடமொழி சதுர்மறை யுருவெனத்
தாங்கிய தனிமுதலே
தகைபெறு மடியவ ரிடர்கெட வேயரு
டற்பர வற்புதனே
முண்டக வாவி சிறைப்பதி வாரண
முத்த மளித்தருளே
முதிரருண் மந்திர மூர்த்தி விநாயக
முத்த மளித்தருளே. (அ)

நகைமதி முகவநி தையர்விழி மயறெரு
நற்றவ ருக்கருளும்
நதியர வொடுபிறை யணிசடை யிறைதரு
நாகமு கத்தவனே
பகையென வருகரி முகவசு ரனதுடல்
படியுற வேர்த்தவனே
பலகலை களினுயர் மணியொளி யெனநிறை
பண்புமி குத்தவனே
தகைநிறை யுலகுயி ரொடுபல பொருளவை
தந்துக ளிப்பவனே
தமிழ்முனி நுதல்கடை புடைகொடு தொழுவரு
டந்திமு கத்தவனே
முகைமலர் துடவைசி றைப்பதி வாரண
முத்தம ளித்தருளே
முதிரருண் மந்திர மூர்த்தி விநாயக
முத்தம ளித்தருளே. (கூ)

பத்திசெய் யடியவ ருற்றுள சூறைமயல்
பறிதர வருள்பவனே
பனிமதி யணிதரு சடைமுடி யிறையுமை
பரிவுறு பாலகனே

சித்திர விழிமட வார்மயன் மேவிய
சிந்தையி னோர்க்கரிய
திருவளர் சிந்துர முகமுள வருணிறை
திருவுரு வானவனே
நத்திய மாலய னிந்திரன் வானவர்
நானில முற்றுறைவோர்
நாடிய வின்ப முறத்திரு வருள்புரி
நாயக மாமணியே
முத்தொளிர் கமுனிசி றைப்பதி வாரண
முத்தம ளித்தருளே
முதிரருண் மந்திர மூர்த்தி விநாயக
முத்தம ளித்தருளே. (ம)

முத்தப்பருவம் முற்றிற்று.

---

## சு. வருகைப் பருவம்.

கந்தமலி கற்பகத் தருமேவு மிந்திரன்
கமலன்மால் விபுதர் முதலோர்
காமுறுங் கன்னிமட. வன்னமனை யாரெழிற்
கந்தரத் துற்றொளிர் தரூஉஞ்
சந்தமங் கலநாண் டனைக்காக்க வருவிடந்
தனையமுது செய்து கண்டந்
தனினீல மணியெனத் தாங்குசங் கரனரு
டழைத்தமெய்ஞ் ஞான வடிவே
பந்தம தறுத்தயோ கத்தவ ருளத்தினிற்
பரபோக சுகா னந்தமாம்
படர்மதியி னமிர்தமென நிறைபிரம மேயருள்
பழுத்தொழுகு தேவ தருவே

முந்துமறை மூலமா யெகளப முகமந்த்ர
மூர்த்திப் பிரான் வருகவே
முழுதுலகு மடிபணிய வருமிறகு சேரியருண்
முதன்மைநா யகன் வருகவே. (க)

அகிலாண்ட கோடிகட் கெனையன்றி வேறுதெய்
வங்களிலை மும்ம லத்தை
யறவிட்டி. யென்றுமழி யாதபே ரின்பவீ
டடைதரப் புரிமந் திரஞ்
சகலாக மங்கள்வே தங்களு மெடுத்தோது
தக்கபஞ் சாக்க ரங்க
டனையன்றி வேறில்லை யென்பதைக் காட்டுறுந்
தன்மைபோன் மோத கத்தை

யிகவா றுறத்தாங்கி மேவுபஞ் சாக்கர
மிலங்குறக் கொண்டு காண்போ
ரிருவிழிக ளோடுநெஞ் சகமகிழவே தோன்று
மெழின்மூதிரு முருவ மணியே
மூகிலின்மும் மதமேவு றுங்களப முகமந்த்ர
மூர்த்திப் பிரான் வருகவே
முழுதுலகு மடிபணிய வருமிறகு சேரியருண்
முதன்மைநா யகன் வருகவே. (உ)

கதிர்களா யிரமுடைய பாநுவிய மானன்மதி
காண்பதற் கரிய வான்கால்
கனல்புனற் புவியுருவ மாக்கொண்டு நெற்றியிற்
கவின்கொள்புண் டரத்தின் மீது
மதியினொளிர் தருதிலத முங்கொண்டு நவரத்ந
மணிமகுட முடியின் மீது
மருவுறக் கொண்டுசெவி யின்மகர குண்டலம்
வயங்கிடக் கொண் டிலங்கு

மதிநலக் கடகபா சாங்குசத் தோடுகோ
டங்கையிற் கொண்டி டையின்மீ
தம்பொனரை ஞாண்கொண்டு பாதமேற் கிங்கிணி
யலம்புறக் கொண்டு மேவு
முதிருமழ வழகொழுகு றுங்களப முகமந்த்ர
மூர்த்திப் பிரான் வருகவே
முழுதுலகு மடிபணிய வருமிறகு சேரியருண்
முதன்மைநா யகன் வருகவே. (௩)

வண்டுபண் பாடிமது வுண்டுதேக் குஞ்செய்ய
மரைமலர்த் தவிசின் மேய
மறையவற் குப்படைத் தற்றொழி லளித்துமொளிர்
மணிநீல வண்ண மேலித்
தண்டுளப மாற்குலகெ லாங்காத் திடுந்தொழி
றனையளித் தோங்கு ருத்ரன்
றன்பெறச் சங்கார வன்றொழி லளித்துமவர்
தத்தமது தொழிலி னிற்ப
வண்டமனு வனுவண்ட மாவுறப் பெரிதுசிறி
தாவுரு வெடுத்தெ வற்று
மலர்மணம் போற்பிரி வறக்கலந் தெங்குநிறை
யகிலநா யகசி றந்த
முண்டக மலர்ப்பாத மொளிர்களப முகமந்த்ர
மூர்த்திப் பிரான் வருகவே
முழுதுலகு மடிபணிய வருமிறகு சேரியருண்
முதன்மைநா யகன் வருகவே. (௪)

மைக்கடற் புவிவான முரகர்தல மெனநின்ற
மாவுலகோர் பதினுன் கினும்
வாழுமா னவர்புலவர் சர்ப்பரா னவருள
மதித்தி யற்றத் தொடங்குந்

தக்ககா ரியமெலா மினிதுமுற் றுறமனந்
தழைத்தவன் போடு செங்கை
தலையுறக் கொண்டுதொழு தேத்தநின் றருள்செயுந்
தனிமுதற் கடவு ளாகி
யெக்கலைக ளும்பரவ வரசுவீற் றருள்கின்ற
வெந்தையே பருதி செல்ல
வியலாது மணிமாட நிறைதேவ கோட்டையி
னெழிற்பூர்வ திக்கின் மேவு
முக்கணன் றருகுமர னேகளப முகமந்த்ர
மூர்த்திப் பிரான் வருகவே
முழுதுலகு மடிபணிய வருமிறகுசேரியருண்
முதன்மைநா யகன் வருகவே. (ரு)

வேறு.

வல்லார் தனத்து மடமாதர்
மதிவாண் முகத்தி னிடைமேவும்
வாளைச் சேலைக் கடுவகிர்மா
வடுவைப் பழித்த விழிவலையிற்
புல்லா ரிடத்து மறையிடத்தும்
பொருவின் மூலா தாரத்தும்
பொன்னு ரிதழிச் சடைமுடியார்
புயபூ தரத்தும் வரைபயந்த
வில்லார் புருவ விழியுமையாள்
விரைச்செங் கமலக் கைத்தலத்தும்
விரும்பி நாளு மெழுந்தருளும்
விமலா வருக நீலநெடுஞ்
செல்லார்ந் தொளிரும் பொழிலிறகு
சேரிக் கயமா முனிவருக

சிந்தை மகிழ்மந் திரமூர்த்திச்
செல்வா வருக வருகவே. (சு)

வானூர்ந் தொளிரு மணிமாடம்
வானூர்ந் தொளிருஞ் சித்திரங்கள்
வானத் தொளிரு மலர்ச்சோலை
வானத் தொளிரு நீர் நிலைகள்
கானூர்ந் தொளிரும் வெளியிடங்கள்
கானூர்ந் தொளிரு மகளிர்குழல்
கற்பார்ந் தொளிரு மூய்யானங்
கற்பார்ந் தொளிரு மங்கையருண்
மீனூர்ந் தொளிரு முயர்மதில்கண்
மீனூர்ந் தொளிரு மலர்த்தடங்கள்
வேலார்ந் தொளிரு மெல்லியர்கண்
வேலார்ந் தொளிரும் வீரர்கரந்
தேனூர்ந் தொளிரும் பொழிலிறகு
சேரிக் கயமா முனிவருக
சிந்தை மகிழ்மந் திரமூர்த்திச்
செல்வா வருக வருகவே. (எ)

மருவார் மலரிற் றேனினங்கள்
வளமார் மனையிற் றேனினங்கள்
வயன்மா மடையில் வால்வளைகள்
மானூர் கரத்தில் வால்வளைக
டருவார் சோலை தனிற்கலைமான்
றனிமா புலவர் பாற்கலைமான்
றண்ணீர்த் தடமா ரம்புயங்க
டமைமா லைகள்சே ரம்புயங்க
ளுருவா ரிலத்துப் பாலன்ன
மொளிர்நீர் வயலிற் பாலன்ன

மோங்கு மணியிற் பெருந்தனங்க
ளுறுமங் கையர்பாற் பெருந்தனங்க
டிருவார்ந் தொளிரும் பொழிலிறகு
சேரிக் கயமா முனிவருக
சிந்தை மகிழ்மந் திரமூர்த்திச்
செல்வா வருக வருகவே. (அ)

கொந்தார் குழன்மா துமையின்ற
குழகா வருக மெய்ஞ்ஞானக்
கொழுந்தே வருக மறைபரவுங்
கோவே வருக வடியர்மனம்

வந்தார் மயலை யறமாற்று
மணியே வருக வானவர்தம்
வாழ்வே வருக வானந்த
வாரி வருக புருவநடு

நந்தா தொளிருஞ் சுடர்வருக
நவைதீ ரமிர்த மேவருக
நாளு மின்ப மழைபொழியு
நலமார் தருமா முகில்வருக
சிந்தா வளமார் பொழிலிறகு
சேரிக் கயமா முனிவருக
சிந்தை மகிழ்மந் திரமூர்த்திச்
செல்வா வருக வருகவே. (கூ)

வானூர் சிந்தாமணி வருக
வளரும் கலைமா மதிவருக.
வையம் பரவுங் கலைஞான
வடிவே வருக கரியவிழி
மானூர் மயலார்க் கெட்டாத
வாழ்வே வருக சித்திபுத்தி

மருவுந் தடந்தோ ளுடையவெங்கள்
வரதா வருக நீண்டொளிரு
மீனூர் விழியாண் மனங்களிக்கும்
விமலா வருக தொண்டர்குமாம்
வேண்டும் வரமெல் லாமளிக்கும்
விகிர்தா வருக மாருத
தேனூர் மதுரப் பொழிலிறகு
சேரிக் கயமா முனிவருக
சிந்தை மகிழ்மந் திரமூர்த்திச்
செல்வா வருக வருகவே. (ய)

வருகைப் பருவம் முற்றிற்று.

---

## எ. அம்புலிப்பருவம்.

மண்டலத் தவரெலா மனமிக மகிழ்ந்தின்ப
வாரியுட் டிளைக்கும் வண்ணம்
வந்தெழில் விளங்கநின் றொளிர்கிரண மெங்கணு
மருவுற விரித்து மாருத்
தண்டனிப் பேரமிர்த மழைபொழிவை நீயிவன்
றரணிவாழ் பவர்க ளெல்லாந்
தழைத்தோங்கு மகிழ்வுளந் தாங்கிடப் பேரின்பத்
தண்கடல் குளிப்ப நின்றே
யெண்டருந் திருவருட் பேரமிர்த மழைபொழிந்
திடுவனு கலினி லங்கு
மிவனின்னை யொத்துளா னெழுதரும் பழமறைக
ளெழில்செய்பொன் னாட்டின் மேவு
மண்டரோ டோலமிட் டறிவதற் கரியவனொ
டம்புலீ யாட வாவே.
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யையகரனொ
டம்புலீ யாட வாவே. (க)

பொங்கெழி றரும்புமழ வுருவனி யிவனழகு
பொழிகின்ற மழவுரு வினன்
பொருந்தும்வெண் மைக்கோடு பொலிவடிவ னியிவன்
புகழ்வெண்மைக் கோடு மேவித்

தங்கும்வடி வினனுலகர் சார்மாலை யிருளினைத்
தண்கதிர் பரப்பி மாற்றுந்
தன்மைதனை யுடையைநீ யிவனன்பு சாருலகர்
தம்மனத் துற்ற மாலைக்

கங்குலைப் பேரரு ளெனக்கூறு கின்றசீர்க்
கதிரினைப் பரப்பி மாற்றுங்
காட்சியா னின்போன்று கண்டவர்த முள்ளங்
களித்திட விளங்கு கின்ற

வங்கனக மன்றினட மாடண்ணன் மதலையினெ
டம்புலி யாட வாவே
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யைங்கரனெ
டம்புலி யாட வாவே. (உ)

பழமறைகண் மொழிதரும் பான்மைவழி யோங்கெழிற்
பாவையர்கள் பலரை யுள்ளம்
பரிந்துயர்ந் துளமணஞ் செய்தின்ப முறுவைநீ
பாரெலாம் பரவு மிவனு

மழலையஞ் சொற்கரிய மஞ்செனச் செறிகூந்தன்
மரையின்மேற் றிருவை யொத்த
மங்கைநல் லார்பலரை மறைகூறு நெறிமுறை
மணந்தின்ப முறுவ னியுந்

தழலோம்பு வினையபூ சுரர்முதற் றரணியோர்
தாவில்மெ யவர்க ளேத்துந்
தன்மையுடை யாயிவனுந் தரணியோர் சுரரேத்துந்
தன்மையா னறிந்து வந்தே

யழகுநிறை தருமிளைய வாம்பல்வத நத்திவனே
டம்புலீ யாட வாவே
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யைங்கரனே
டம்புலீ யாட வாவே. (௩)

நானில மெலாம்புகழ மேவுமுன் வடிவென்று
நண்ணுமோர் தன்மை யின்றி
நாடொறுந் தேய்ந்துதேய்ந் தேவளரு மிவன்வடிவு
நாளுமொரு தன்மை யுற்று
வானிலமு மாநிலமு மருவிநின் றேத்துற
வனப்புடன் விளங்கு நீயு
மாசுணப் பகைபெற் றுளம்பதறி யஞ்சியுயர்
வானகத் துழல்வை யிவனக்
கானிலவு மூணமா சுணமெலாந் தனதுடற்
கண்பூண தாவ ணிந்து
களிப்புறுவ னுதலா லுன்னினிவன் மேன்மையான்
கண்டிதனை யுண்மை கிழ்ந்தே
யானிலவு சங்கரன் றருகுமர னேடைன்பி
னம்புலீ யாட வாவே
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யைங்கரனே
டம்புலீ யாட வாவே. (௪)

செம்பவள மொத்தவித மமுதமொழி வாய்பிறழ்ந்
திடுசேற்கண் மாதர் காதற்
செறிமனத் தோடுநீ நாளுமொரு மனையிலஞ்
சேர்ந்தவரி னேடும் வாழ்வை
பம்பெழில் பரித்தபா வையர்காத றன்னுளம்
பற்றுத தன்மை யாரும்
பார்த்தறி தரப்பாங்கர் மனைவியரி லொருவரும்
படர்தரா துறைவ னியு

மிம்பருல கத்தர்கண் டிகழுவரு வத்திடை
யிலங்குமைக் களங்க முற்று
யிவனென்று முலகெலா மேத்தவக ளங்கவுரு
வினிதுகொண் டுறைவ னேர்ந்தே
யம்புயத் தவள்கொழுந னயனேத்து மிவன்றனோ
டம்புலி யாட வாவே
யணியிறகு சேரிமங் கிரமூர்த்தி யைங்கரனோ
டம்புலி யாட வாவே. (ரு)

சுரும்புசூழ்ந் துண்டுகளி கொண்டுபண் பாடவிண்
டொடுகுடுமி வரையி னின்றுந்
தோன்றருவி போன்றுமும் மதங்கானு மாதங்கத்
தொண்முகங் கொண்ட வசுரன்
றரும்பெருந் துன்பமா லயனிந்தி ரன்சுரர்க
டம்மோடு நீயு மாறச்
சமரிலவ் வசுரனைக் காய்ந்துயிர் செகுத்தவன்
குனென்ப தறிவை சேரிற்
பெரும்பகைய தாவுற்ற கொடுவிடப் பாம்பையும்
பிறங்குபூ ணுவ ணிந்த
பீடரவி னோடுற வணிந்தருளு வானிவன்
பெரிதுள மகிழ்ந் தழைத்தா
லரும்பெருங் கலைமறைக ளறிவதற் கரியவனோ
டம்புலி யாட வாவே
யணியிறகு சேரிமங் கிரமூர்த்தி யைங்கரனோ
டம்புலி யாட வாவே. (சு)

மலையிற கரிந்தவச் சிராயுதன் றண்டுளப
மான்மறைப் பூவின் மேலோன்
வானவர்கள் சித்தர்முனி வரர்திசைக் காவலர்
வசுக்கண்மா தவர்கள் யோகர்

சிலைவலி படைத்தபுவி யரசர்கலை யறிவினற்
சிறந்தபெரி யோர்க ளாதி
செப்புமா னவர்தரணி சிரமிசைத் தாங்காதி
சேடன்முத லுரக ரெல்லாந்
தலைமைபெறு நிலைமையிற் ருழாது வாழவுந்
தனித்தலீ தொடங்கி யற்றுஞ்
சகலகரு மங்களு மினிதுமுற் றவுமிவன்
ருண்மலர்கள் போற்றி யுள்ள
மலையாது மகிழ்வரம் பெறுவரீ தாய்ந்திவனெ
டம்புலி யாட வாலே
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யைங்கரனெ
டம்புலி யாட வாவே. (எ)

முந்தைமறை மிகமுயன் றுந்தேடி யறியாத
மூர்த்தியிவ னேடு கூடி
முன்னின்று விளையாட வின்றுநீ வந்திடின்
முதிருநின் னெழின்மு கத்து
வந்துஃமா ருதுறுங் களங்கமுட னேமாறும்
வலியமை நாக மென்னும்
வன்பகையு மாறிடும் வளர்வதுந் தேய்வது
மாகியுறு குறையு மாறி
யெந்தநா ளுங்கதிரின் வானத் திலங்கலா
மிவையெலா முணர்தி யுன்னை
யிதயமகிழ் வோடுசெங் கரநீட்டி வாவென்ன
வினிதழைக் கின்ரு னிவ
னந்தமிடை யாதியில் லாவிறைவ னேர்ந்துநீ
யம்புலி யாட வாவே
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யைங்கரனெ
டம்புலி யாட வாவே. (அ)

வையகத் தோடுவா னுலகுரக லோகமும்
வணங்கித் துதிக்க வருள்செய்
மாதங்க வதனப் பிரானுன்னை யன்புடன்
மகிழ்ந்தழைத் திடவு மதனை

யுய்வதற் குரியதென் றுணர்ந்துரு தவமதித்
துறுவையே லிவன்சி னக்கி
லுற்றதுணை யாருமக் கறிதிமதி தக்கனு
ருஞற்றிய மகத்தை முன்பு

வெய்துற வழித்திட்ட விடலையிவ னுக்கிளைய
வீரனென வோர்ந்தி லாயோ
மிகவிரைந் தெய்துங் கொடுந்தண்டம் வானத்தை
விட்டிங்கு விரைவி னுறுவா

யையனுள மீதோங்கு மன்புறக் கூறினே
னம்புலி யாட வாவே
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யைங்கரனெ
டம்புலி யாட வாவே. (சு)

கற்றவரி னேடுமாற் கணைகொண்டு முப்புரங்
களையழித் திடவொர் மூன்று
கண்கொண்ட தந்தைதனை யெண்ணாது சென்றிடக்
காசினித் தேரி னுறுமச்

சிற்றிடச் செய்துதண் டித்தனன் றன்பாங்க
ரெய்துசக் கரத்தை முன்னுற்
றேற்றதிரு மான்மாம னென்றெணு மல்விகட
வெழினடங் கண்ட ளித்த

கொற்றமிக் குடையவன் கோபமுறி லுன்றனைக்
குலவுதன் றுதிக்கை நீட்டிக்
கோலநின் மனைவியர்கள் கூசிடக் கொடுவந்து
குமைத்திடுவ னுணர்தி யுற்ற

வற்றவர் தமக்கெலாம் வேண்டுவ வளிப்பவனொ
டம்புலீ யாட வாவே
யணியிறகு சேரிமந் திரமூர்த்தி யையங்கரனொ
டம்புலீ யாட வாவே. (௰)

அம்புலிப் பருவம் முற்றிற்று.

---

## அ. சிற்றிற் பருவம்.

மருவார் கமல மயில்கொழுநன்
வனசத் திசைமா முகன்சசி தோண்
மருவுங் குலிசக் கரனிமையோர்
வசுக்க டிசைகா வலருரகர்
பெருவா ருதியார் தருநிலத்தோர்
பீடார் முனிவ ரொடுதவத் தோர்
பேணி நாளும் பணிந்தெழுந்து
பிறங்கு கரமுச் சியிற் குவித்துக்
கருவார் கடற்கோர் புணையாகுங்
காலா வுமையா டருபாலா
காவா யெனநின் றேத்தெடுப்பக்
கருணைப் பெருமா மழைபொழியுந்
திருவார் சிறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (க)

மின்னார் சடில னிமயமருள்
விமலை விழியுள் ளங்களிப்ப
வேழ முகமுந் தழைசெவியு
மிளிரும் மொருவெண் டிருக்கோடும்

பொன்னூர்ந் தொளிருங் குடவயிறும்
புயபூ தரமுங் குறுங்காலும்
பொலிய நடந்து விளையாடும்
புநிதா விபுதர் பெருவாழ்வே
யென்று யகனே யுனைமறந்தோ
மெளியேஞ் சிற்றி லிழைக்கின்றோ
மிதனை மிகையென் றெண்ணாதே
யினிய வருளி புரியின்று
தென்னா ரிறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (உ)

பெய்மா முகிலின் மதங்காலும்
பீடார் களிற்றின் முகர்படைத்த
பெரியோ யியற்றெஞ் சிற்றிலினைப்
பேணி யழிக்க நீவிரும்பி
லையா தண்டை யணிந்தொளிருன்
னரவிந் தத்தா ளரிசியென
வமைத்த முத்து மெரியாக
வடுப்பி னிறைத்த வரதநமு
னைய வுறுத்து மெனவுள்ள
நடுங்கு கின்றோ மிஃதோர்ந்து
நளின மலர்மேற் பாலன்ன
நலமார் பெடையி னுடன் வாழுஞ்
செய்யா ரிறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (௩)

வாச வனைநே ரொத்தபெரு
வளத்தான் வேங்கடாசலப் பேர்
மாலை வயிர வணைக்குலதெய்
வங்க ளாகக் கொண்டுதொழு

நேச னறத்துக் கொருதாயாய்
நின்று வளர்த்த தனவணிக
னிகரில் கருப்ப மாலமைத்த
நிறைந்த வெழிற்கோ யிலின்மேவு

மீசா வட்ட வடிசிறனே
யினிது நீயிங் கமுதுசெய
வேழை யேமுன் னுகவுனக்
கிடுவோ மன்பி னினிதாகத்

தேசா ரிறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (அ)

அகந்தை மிகுந்தக் கன்மகத்தை
யழித்தா னுன்ற னிளவல்வலி
யமைந்த வசுரர் வாழ்புரத்தை
யழித்தா னுன்றன் றிருத்தாதை

யுகந்துன் பாதந் தினம்பணிவோ
முள்ளத் தகந்தை யொன்றுமிலோ
மோவாக் கருணை மழைபொழியு
மும்பன் முகத்தைங் கரத்தேவே

சகந்தன் னிடத்துப் பகைவர்தமைத்
தண்டிக் காதெங் களைவருத்த
றகுமோ தனத னகர்மான
தடமா மதின்மா ளிகைவீதி

திகழு மிறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (ரு)

விண்ணீ ரணிந்த முடிப்பரமன்
விரும்பச் சூழ்ந்து கனிபெற்ற
விகிர்தா னினது வருகைதனை
விரும்பி நோக்கி மனமகிழ்ந்து

பண்ணீர் மையினை யுறுமொழிவாய்ப்
பதுமத் தொளிரும் நகைதோன்றும்
பண்பிற் சிரித்தோ மல்லாது
பருத்துத் திகழுங் குடவயிறு

மெண்ணீர் மதவாம் பன்முகமு
மிலங்குங் குறுங்கா லொடுநடையு
மேழை யேங்கண் டுனைச்சிரித்த
திலைநீ கருணை புரிமறைசேர்

தெண்ணீ ரிறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (சு)

பங்கே ருகத்துந் தாலிடத்தும்
படியோர் போற்ற வீற்றிருக்கும்
பாவை யிருவர் பணிகொள்ளும்
பனிமா மலையா டிருவிழியுட்

டங்கு மணியே குடவயிறுந்
தந்தி முகமு மொருகோடுந்
தயங்கப் பண்ணி யங்கரத்திற்
றுங்கி வருநின் வருகைகண்டு

பொங்கு பரிக லச்சேடம்
புசிக்க வளிப்பா யெனமகிழ்ந்தோம்
புலன்கொ ளதற்கு மாருகப்
புசிதா வருத்த லழகாமோ
தெங்கா ரிறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (எ)

ஆலம் பரித்த மணிகண்ட
ருண்மா மணியே யேரம்பா
வானை முகனே விநாயகனே
யரியின் மருகா வைங்கரனே
ஞாலம் போற்று நால்வாயா
நலமே புரியுங் கணபதியே
நண்ணும் பாசாங் குசதரனே
நாதா வென்றென் றேகூறிக்
கோல மலரி னின்பதமுட்
கொண்டு வணங்குஞ் சிறியேம்பாற்
குறும்பு புரிந்து வருத்துவதுங்
கோமா னினக்குப் புகழாமோ
சீலா விறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (அ)

பன்மா வண்ட கோடிகளைப்
படைத்துக் காத்து நின்றழிக்கும்
பழமா மறைக்கு மெட்டாத
பரமா னந்த வடிவுடைய

தன்மா மாருத் தயாபரனே
தனிமா முதலே யருட்கடலே
தாட்டா மரைமா மலர்வருந்தத்
தமியே மணல்கொண் டியற்றுவித்த
பொன்மா மனையை யழித்தெம்மைப்
புலம்ப வைத்து மகிழ்வதுவும்
புகமோ நினக்குப் புகன்றிடுவாய்
புலவர் நகரந் தனைமானுந்
தென்மா விறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (கூ)

உருவ மருவ முருவருவ
முடைய திருமே னிகளுடனே
யோங்கு சைவ சித்தாந்தத்
தொளிரு மணியே சிவஞான
மருவும் போத நூலினுக்கு
வார்த்தி கப்பே ருரைவெண்ணெய்
வாழு மெய்கண் டான்றெளிய
வழங்கி யருளுஞ் சுயஞ்சோதி
தெருவி லியற்றெஞ் சிறுவீட்டைச்
சிதைத்து விக்ந ராசனெனுந்
திருப்பே ருடன்பா டாக்குவித்தல்
சிறப்போ சுகங்கி தம்பாடுந்
திருவ விறகர் நகர்மேவுஞ்
சிறுவா சிற்றில் சிதையேலே
தேவா முதன்மந் திரமூர்த்திச்
செல்வா சிற்றில் சிதையேலே. (ய)

சிற்றிற் பருவம் முற்றிற்று.

———

## ௬. சிறுபறைப் பருவம்.

மங்கல மிகுந்தமுனி மன்மறைக ளுன்கொடு
வயங்குமைந் தெனப் பாரத
வளக்கதை விரித்துரைத் திடவதனை மேருவொரு
வான்புறந் தனிற் றீட்டவுஞ்
சங்கெறி தரங்கக் கருங்கடலி னடுவட்
டயங்கிலங் கேச னுதவு
தக்கசிவ லிங்கமேற் றுத்தரையில் வைக்கவுந்
தடப்பணைப் பொன்னி நாடாள்
கொங்குவிரி யாத்திமா லையனுள மகிழ்ந்திடக்
கோதிறே வார மேவுங்
குறியிடங் காட்டவு மிலங்குகோ கனகநேர்
குலவுமின் னங்கை கொண்டு
செங்கமலை மான்மகிழு மருகமந் திரமூர்த்தி
சிறுபறை முழக்கி யருளே
தென்னிறைந் தோங்கிறகு சேரிமகி ழைங்கரன்
சிறுபறை முழக்கி யருளே. (௧)

சைவசம யப்பயிர் தழைத்திட வளர்த்துவந்
தருளாறு முகநா வலன்
றனதுமா ணவர்தம்மி லொருவராம் வன்றொண்டர்
தண்டமிழ்க் கூடன் மேவு
மைவளரு மங்கையற் கண்ணிசொக் கேசர்திரு
வாலயப் பணிபுரிந்தவ்
வாலவாய்ப் பதியினுயர் திருமடந் தாபித்த
மாதவக் குட்டை யையா
மெய்விரும் பியதுறவு சாமிகரு ணாநிதி
விளங்குமெய்த் தவரு தித்த
மேன்மைபெறு மைந்துவீட் டார்களெனும் வணிகர்பணி
விரும்பியேற் றருளு கின்ற

தெய்வநா யககருணே வடிவமந் திரமூர்த்தி
சிறுபறை முழக்கி யருளே
தென்னிறைந் தோங்கிறகு சேரிமகி ழைங்கரன்
சிறுபறை முழக்கி யருளே. (௨)

பூவுற்ற மணமெனக் கனலுற்ற சூடெனப்
புனலுற்ற சீத மென்னப்
பொருவின்மணி யொளியெனப் பாலுற்ற சுவையெனப்
புவனண்ட கோடி யெல்லா

மேவுற்று நின்றசச் சிதானந்த ரூபனே
மேவலர்கண் மேற்கோ பனே
விண்ணவர்கண் மண்ணவர்கள் பணிபாத னேசைவ
மேவிநின் றருள் போதனே

தாவுற்றி டாதடிய ருளம்வேண்டு பொருளெலாந்
தகவுற வளித்தி லங்குந்
தந்திமுக புண்டர மலர்ந்தநுத லோடெழி
றதும்புருவ னாளு மாறுந்

தேவுற்ற மாகருணே வடிவமந் திரமூர்த்தி
சிறுபறை முழக்கி யருளே
தென்னிறைந் தோங்கிறகு சேரிமகி ழைங்கரன்
சிறுபறை முழக்கியருளே, (௩)

செக்கரஞ் சடைமுடித் தேவனருள் பாலனுச்
சிவஞான போத ரூபத்
தினகரனு மாயோங்கு பழமறைக ளுடோறுந்
தேடனின் றுளிர்பொ ருளுமாய்த்

தக்கயோ கியருளத் தென்றென்று மாருத
தனிமதுர நிறைய மிர்தமாய்த்
தண்டமிழி னேடுவட மொழியுமாப் பேரொளி
தழைத்தோங்கு முச்சு டருமாய்

யெக்கலையு மாயவற் றுறுபொருளு மாய்நின்ற
வியமான னைம்பூ தமா
யிலங்கசர சரபேத மெவ்வெவற் றுங்கலந்
திருக்குமொன் றுய்வி ளங்குந்

திக்கெலாம் புகழ்கருணை வடிவமந் திரமூர்த்தி
சிறுபறை முழக்கி யருளே
தென்னிறைந் தோங்கிறது சேரிமகி ழைங்கரன்
சிறுபறை முழக்கி யருளே. (௪)

வேறு.

மன்னிய சைவமி லைத்திரு நீறிலை
மணியிலை யின்பருள்செய்
மந்திர மிலைமறை யிலைமநு வறநெறி
வழுத்திடு நூலுமிலை

பன்னிய பலபல சாதிக ளிலைபதி
பசுவிலை கடவுட்குப்
படரொளி யாலயம் வேண்டுவ திலையிவை
பார்ப்பனர் சூழ்ச்சியெனத்

தன்னுறு மமதையின் மொழிதரு முழுமகன்
றடுநிலை தடுமாறச்
சத்துவ மிக்ககு ணத்தடி யவர்க
டழைத்தின் புடன்மேவ

முன்னெழின் மந்திர மூர்த்தி விநாயக
முழக்குக சிறுபறையே
முதுமறை யொலிநிறை சிறகர் பதிக்கோ
முழக்குக சிறுபறையே. (௫)

தக்கமறைக்கலை மொழியற நெறியுறை
தவமிகும வணிகர்குலந்
தனில்வரு மிறகு நகர்ப்பெரு வாழ்வு
தழைத்த வெழிற்குணவான்

மிக்கபெ ரும்புகழ் மேவுற மாவற
மியற்று கருப்பனெனும்
விரிதரு மன்புசி றந்தம னத்திரு
வித்தக னின்றதிரு

மக்கடன் வழிவழி யாகவ ருந்தன
வணிகர்செய் பணிகொண்டு
வளமலி பெருநிதி யவர்பெற வருள்செயும்
வாரண மாவதன

முக்கணெம் மந்திர மூர்த்திவி நாயக
முழக்குக சிறுபறையே
முதுமறை யொலிநிறை சிறநகர் பதிக்கோ
முழக்குக சிறுபறையே. (௬)

தத்தலை யெறிகட லுடையுடைப் புவிபொரு
தலைமிசைத் தாங்குருபா
தலமுறு மரவிறை யுடனெளி யத்திசைத்
தந்திகண் மதமாறிச்

சித்தந டுங்கிட மேருகி ரித்தலை
சிதறிட வுயரண்டத்
தின்முடி பிளவுபொ ருந்திட வசுரர்கள்
சிந்தை கலங்கியிடப்

பத்தியி னெளிருடு வின்கண முதிர்தரப்
பகன்மதி நிலேமாறப்
பங்கய னரிதிகைப் புற்றிட வெழின்மிகு
பதுமநற் கரங்கொண்டு
முத்தணி மந்திர மூர்த்திவி நாயக
முழக்குக சிறுபறையே
முதுமறை யொலிநிறை சிறகர் பதிக்கோ
முழக்குக சிறுபறையே. (எ)

வேறு.

கருவினி லேயடி யார்கள் புகாதருள்
கச முகனே
கலேபல தேர்ந்தவர் சிந்தையின் மேவிய
கனி ரசமே
யருவுரு வாகியவ் விருவுரு வோடுநின்
றருள் பவனே
யரிபிர மாதியர் பணிதர மேவிய
வவி ரொளியே
மருமலி குழலிம வான்மகள் விழிகளி
ம விடவே
வருமொகு பாலக ஞகவி ளங்குறு
மதி நிறைவே
திருவிற கர்ப்பதி யிறைவன் முழக்குக
சிறு பறையே
சிவமருண் மந்திர மூர்த்தி முழக்குக
சிறு பறையே. (அ)

ஏரோடு விண்பனி யும்பெரு வாழ்வு
தெரிந் தருளும்
திருமறை கண்டறி யாதுநி றைந்த
செழும் பொருளே

வாரொடு மேவிய முலைமட வார்மயன்
மன மதனின்
மன்னம யங்குறு வார்க்கரி தாகிய
வளர் நிதியே

பாரொடு விண்மிசை மேவிநி றைந்த
பயக் கடலே
பற்றிலர் சிந்தையி னுற்றுறை தருமொரு
பட ரொளியே

சீரிற கர்ப்பதி யிறைவன் முழக்குக
சிறு பறையே
சிவமருண் மந்திர மூர்த்தி முழக்குக
சிறு பறையே, (௬)

தப்பற முப்பொரு ளிலைமை தெரித்தரு
டற் பரனே
சகலர்த மருவினை கெடவருள் புரிதரு
சற் குணனே

முப்பொழு துந்திரு நீறணி வார்க்கருண்
முற் றறிவே
முக்கண னுக்கொரு புத்திர னாகிய
முற் பொருளே

யப்பமொ டவல்பொரி கப்பிய கரிமுக
வற் புதனே

யடியவ ருக்குயர் வளம தளித்தருள்
பொற் பதனே
செப்பிற கர்ப்பதி யிறைவன் முழக்குக
சிறு பறையே
சிவமருண் மந்திர மூர்த்தி முழக்குக
சிறு பறையே. (௰)

சிறு பறைப் பருவம் முற்றிற்று.

---

## ௯. சிறு தேர்ப் பருவம்.

செக்கர்ச் சடாமகுட நக்கனுமை மகிழ்தரத்
தேவரிந் திரன டுங்கத்
திசைமுகன் பங்கயச் செங்கணன் றனையனூர்
திருமனைவி மார்ப யந்தே
யொக்கப் பிடித்துநெஞ் சிடைமுலைக் கோடுற்று
றுத்தவிறு கத்த மூவரீ
டோதவா ழிகளேழு மொன்றினே டொன்றுசென்
றுற்றுக்க லந்து நிலவத்
தக்கபா தலவுரகர் புக்கொளித் தற்கிடந்
தானின்றி மறுகி யேங்கத்
தாரணி தனைத்தாங்கு சேடனுங் கூர்மமுந்
தலைவெரிந் நெளிக்க மாடந்
திக்கெட்டு மாரிறநு சேரவிக் கிநராச
சிறுதே ருருட்டி யருளே
சின்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (க)

பன்னுற்ற கலிப்பத மையாயி ரத்துநாற்
பத்தொன்ற தாக நன்கு
பயிலும்விக் கிரமவாண் டுபர்மகர மதியினிரு
பானேழ தாந்தி கதியாய்

மன்னுற்ற பாநுவா ரந்துவா தசிதிதியின்
மருவுபுநர் பூச மீன
மகிழிலக் கினமுமொன் றியசுப தின மதனிலே
வளமிலகு தேவ கோட்டை

யின்னுற்ற தனவணிகர் தமிலிந்து வீட்டின
ரெனப்புகலு மெழின லத்த
ரினிதுபழு தறப்பணி புரிந்துமா கும்பாபி
டேகஞ்செய் திடம கிழ்ந்த

தென்னுற்ற பொழிலிறகு சேரிவிக் கினராச
சிறுதே ருருட்டி யருளே
சிங்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (உ)

மங்கலமி குந்தவே தாகம மெடுத்தோது
மாசைவ சமய மென்னும்
வான்பருதி யைச்சூழ வெழுகின்ற பரசமய
வலியின்முகில் சாய வுள்ளங்

தங்குமும் மலப்பெரும் பகைசாய வடியரைச்
சாருமிடி சாய மிக்க
தருக்கினொடு மேவுமே கான்மவா திகள் சாயச்
சஞ்சலம் புரியும் வன்மை

பொங்கும்வல் வினைசாய வஞ்ஞான விருள்சாயப்
பொய்களவு கோப மாதி

புரைபாத கஞ்சாய நவமணித் திரள்கொண்டு
பொற்புறப் புனைந்தி லங்குஞ்

செங்கமலை மேவிறகு சேரிவிக் கினராச
சிறுதே ருருட்டி யருளே
சிந்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (௩)

தவஞ்செறி கருப்பனபி தானமே வியசெழுந்
தனவணிகர் கோன்மை யப்போர்த்
தச்சனுங் கண்டதி சயிப்பவொளிர் கோயிலுஞ்
சந்நிதியி னுற்று டுவோர்

பவஞ்செறி தராதபூந் தடமுமண மெங்கணும்
பரப்பிட மலர்ந்தி லங்கும்
பலமலர்க ளுதவுநந் தனவனமு மாகமப்
படிபூசை முறைபு ரிதர

நவஞ்செறி நிபந்தமா தியவெலா மென்றென்று
நண்ணிட வமைக்க வந்த
நற்றவனை மற்றவன் வம்சத்தொ டுங்காக்கு
நாயகா விபுதர் தலைவா

சிவஞ்செறிந் துறுமிறகு சேரிவிக் கினராச
சிறுதே ருருட்டி யருளே
சிந்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (௪)

ஆரணந் தேடியறி யாதோல மிடவெள்ளை
யானேறி யூரு முக்க

ணையன்மலி மூந்துதிக் கையுடைப் புதல்வவோங்
கம்பொன்மலை முன்பு தந்த

வாரணங் இளமுலைய மயிலினயில் விழியிரெளிர்
மணிகருங் கொண்ட னீல
வண்ணனன் புக்குரிய மருகவா னவரெலாம்
வாட்டமுற் றஞ்ச நின்ற

சூரணங் குறவெற்றி வேல்கொண்ட செங்கரச்
சுந்தரக் கந்த வேளின்
றுணைவகன் னற் சிலையன் மனதினுக் இனியமைத்
துனவழகு நிறைகொ ளிஞ்சிச்

சீரணங் கமரிறகு சேரிவிக் கிநராச
சிறுதே ருருட்டி யருளே
சிங்மயா னந்தமங் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (ரு)

வான்கொண்டு வாழிமய வருமெழிற் சசியகல
மருவியண் ணுங்தெ ழுந்து
வளருமிள முலைஞெமுங் கப்புல்லி வண்டுறை
மலர்பொதுள விலகு கற்பக்

கான்கொண்ட நீலவரி யணைமேவு மாயிரங்
கண்ணனுந் திரைபொ ரும்பாற்
கடலுற்ற பாம்பணைப் பள்ளியா னுந்திருக்
கமலமே லயனு மஞ்ச

மான்கொண்ட செங்கரன் வரங்கொண்ட கயமுகன்
மனமஞ்சி மறுக நீண்ட
மணியிரத மூர்தன்முன் காட்டுமா போல நிறை
மதிவதன மொளிர மதுரத்

தேன்கொண்ட பொழிலிறகு சேரிவிக் கிநராச
சிறுதே ருருட்டி யருளே
சின்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (௬)

தருவுற்ற பொன்னகர்த் தனிவளஞ் செறிவுற்ற
தடமதிற் றிருமா ளிகை
சார்வுற்ற தேவகோட் டையினுற்று வாழ்திருத்
தனவணிக ரின்ம லர்க்கா
மருவுற்ற திருவிருப் பைக்குடியின் மேவுற்ற
மதியரவு கொன்றை கங்கை
மன்னுற்ற செஞ்சடைத் தான்றோன்றி யீச்சுரன்
மகிழ்சவுந் தரநா யகி
பொருவுற்ற புண்டரீ கப்பதந் தொழுமைந்து
பொன்மனையி னூர்கள் செய்யும்
பொற்புற்ற பணிகளேற் றவர்வேட்ட பொருளெலாம்
பொருந்தநின் றருளு மரசே
திருவுற்றி லங்கிறகு சேரிவிக் கிநராச
சிறுதே ருருட்டி யருளே
சின்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (௭)

சத்துவ மிகும்வேத சம்பந்த முற்றசிவ
சமயமுல கெங்கு மேவித்
தழைத்தோங்க ஞானவெண் ணீறோங்க வெழின்மிகத்
தருமுருத் திராக்க மென்னு
நத்துதிரு மணியோங்க வுயர்ந்தபஞ் சாக்கர
நன்றோங்கத் தொண்டர் கூட்ட

நாடோறு மோங்கமறை நெறியோங்க வறமெலா
நனியோங்க வுண்மை யோங்க
வெந்திசையும் வளமோங்கச் சிவாலயப் பணியோங்க
வினியவா னிறைக ளோங்க
வென்றுமது ரத்தமிழி னிலையோங்க மறைமலரி
னிலங்குகை கொண்டு பற்றிச்
சித்தர்மே வுறுமிறகு சேரிவிக் கிராச
சிறுதே ருருட்டி யருளே
சிந்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (அ)

ஓங்குமறை யாகம முரைக்கின்ற வத்துவித
வுண்மைநிலை யதனை யுயர்தன்
னுருவத்தி னுலுநின் டொளிர்துதிக் கையா லு
முறையா துணர்த்து கின்ற
தாங்குற்ற பாசாங்கு சத்தனே சண்முகன்
றனைவள்ளி மான்ம கிழ்ந்து
தடமார்பின் முலையுறப் பங்கயக் கைகளாற்
றழுவவுயர் கிரியின் மேய
பாங்குற்ற பாய்மதக் களிருக வந்துற்ற
பண்ணவா பரவை கேள்வன்
படர்பொன்னி நீர்கடந் தேறமு னழைத்தருட்
பருதிமதி கனல்கோ ணயன
தேங்குநீர்ப் பணையிறகு சேரிவிக் கிராச
சிறுதே ருருட்டி யருளே
சிந்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே (௯)

பாலலோ சனன்குமர நம்பியாண் டார்நம்பி
பரிவுளங் கொண்டு முன்னம்
படைத்தநை வேதனங் களையெலாஞ் சோழனும்
பரிசனங் களுமகிழ்ந்து
கோலவிழி யானேக்க வமுதுசெய் தம்மனன்
குறைகளைந் தருளி யாண்ட
குஞ்சர முகத்தண்ண லேயடியர் பாற்கருணை
கொண்டரசின் வீற்றி ருக்கு
நீலமலர் வண்ணன்மரு காவுளது பாதமலர்
நினைபவர்க் கேது குறைசொல்
நீள்கருணை யுருவனே யுலகெலாம் பணிகின்ற
நித்யகல் யாண குணனே
சீலமே வியவிறது சேரிவிக் கினராச
சிறுதே ருருட்டி யருளே
சின்மயா னந்தமந் திரமூர்த்தி யேரம்ப
சிறுதே ருருட்டி யருளே. (ய)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

மந்திரமூர்த்தி பிள்ளைத்தமிழ்
முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

# ஸ்ரீ மந்திரமூர்த்தி விநாயகர் பதிகம்.

---

காப்பு வெண்பா.

சீரார் தருமிறகு சேரிவா விக்கரையி
லேரார்ந் தெழுந்தருளு மேரம்பப்—பேரார்ந்த
மந்திரமூர்த் திப்பதிக மாலைக்குச் சொற்பொருளைத்
தந்திடுமம் மூர்த்திதிருத் தாள்.

நூல்.

இங்கடவும் மணிமாட நிறைவீதி பலமிளிர்ந்
திடுதேவி கோட்டை நகரிற்
செங்கண்மால் விடையூரு மங்கையுமை பங்கனிரு
திருவடிக் கன்பு பூண்ட
மங்காத வளமுற்று வாழ்கின்ற மகுடதன
வணிகர்தமு ளைந்து வீட்டார்
வளம்பெறக் கண்டவா லயமேவித் தன்பதம்
வணங்கடியர் குறைக ளவர்பாற்
றங்காது செய்தனுர் வேண்டுகின் றனவெலாந்
தழைத்திட வளித்தி லங்குஞ்
சர்வபரி பூரண விமலசுத் தாத்துவித
சைவசம யத்தலைவ வான்
கங்கா தரன்புதல்வ கந்தன்முன னவசெழுங்
கரிவதந பிரணவ விழிக்
கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமந் திரமூர்த் தியே. (க)

செங்கதிர்க ளொருகோடி. விண்ணுற்ற தென்னவொளிர்
திருமுடியி னழகு நுதலிற்
றீட்டுதிரி புண்டரக் கீற்றினடு வொளிர்கின்ற
திலதவழ குஞ்சி றந்த

பொங்கொளி ததும்புமொரு கோட்டினழ குங்கசப்
புகர்முகத் தழகு நால்வாய்ப்
புகிதவழ கும்பாசாங் குசமோத கங்கோடு
பொருந்துமைங் கையி னழகுந்

தங்குபே ரருள்பொழியு மிருகணழ கும்மாலை
தாழ்புயத் தழகு முதரத்
தனியழகு மொளிர்தண்டை கிண்கிணி சதங்கையொலி
தருபாத வழகு மென்றுங்

கங்கைகொண் டேபரவு மடியரிரு விழிகளுங்
கண்டுகளி கூர மேவுங்
கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமங் திரமூர்த் தியே. (உ)

வாரண முகத்தனே மங்கையுமை பாலனே
மலர்க்குழற் சித்தி புத்தி
மகிழும்வை போகனே யோகனே யோகியர்
மனத்தகத் திருளை மாற்றும்

பூரணக் கதிரிளம் பாநுவே யரவுபுனை
புராந்தகன் றநு குனுவே
பூவுலகர் போற்றுநால் வாயனே யடியர் குறைப்
போக்கியாண் டருணேயனே

தோரணம் பொலிவீதி தேவகோட்டையின் வணிகர்
தொண்டுகண் டகம கிழ்ந்து

சுவர்ணநவ மணிமுதற் சொல்கின்ற வளமெலாந்
தூயவவர் பெறவ ளிக்குங்
காரணப் பொருளாகு நாராய ணன்கூத்துக்
கண்டுசக் கரம ளித்த
கருணைபொழி தருமிறது சேரியைங் கரவாதி
கர்த்தமந் திரமூர்த் தியே. (ரு)

ஆசின்மறை யாவுநீ யாகம விதங்களீ
யாறுசாத் திரமு நீமூ
வாறெனும் புராணநீ பேசுகலை யாவுநீ
யட்சரத் தொகுதி நீசொன்
மாசிலைம் பூதநீ மதியிரவி யாதியா
வழுத்துநவ கோளு நீவிண்
வாழுடுக் கணமுநீ யியமானன் வர்க்கநீ
மணிமந்த்ர வவுட தமுநீ
பேசின்ப வகையுநீ சரவசர பேதநீ
பிண்டாண்ட மவையு நீயே
பிரணவ சொரூபவாய்ந் திடிலுன்னை யல்லாது
பிறிதுபொரு ளொன்றை யிந்தக்
காசினி தனிற்காண்கி லேனென்று மாறுத
காட்சிதந் தெனையா ளுவாய்
கருணைபொழி தருமிறது சேரியைங் கரவாதி
கர்த்தமந்திர மூர்த் தியே. (சு)

மணமாலை யணிகுமுன் மனைமக்கள் சுற்றமெனு
மாயைமன துற்று யர்ந்த
மதியினை மறைக்கவத னுலுண்மை யுணராது
மயங்கினா டோறு மாசை

பணமாதி பொருளின்மேல் வைத்தவற் றைப்பெறப்
பகலிரவு பாரா மலே
பலதுறைக ளிற்சென்று வஞ்சகத் தோடுபோய்
பலசொல்லி நாளு நாளுந்
தணவாது சுழல்கின்ற காற்றாடி போன்றவென்
றன்மையைப் போக்கி மேனி
தன்னில்வெண் ணீறுகண் மணிபூண்டு வுன்றிருச்
சரோருக மலர்ப் பாதமேற்
கணமேனு மென்மனம் பொருந்தியின் றின்புறக்
கடாட்சம்வைத் தருள்பு ரிகுவாய்
கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமந் திரமூர்த் தியே. (ரு)

தந்தைதாய் பாலுணுங் குழவியைக் கைவிடிற்
றுனது பிழைப்ப துண்டோ
தமியனே னக்குழவி நிலையினே னுனையன்றித்
தந்தையாய் வேறு முண்டோ
சிந்தையி னிடத்துறுங் கவலையோ பெரிதநிற்
சிக்குண்டு சுழலுமென்னைத்
தீயனென் றெண்ணாது பேரருள் புரிந்தின்பஞ்
சேர்ந்தினிது வாழ வைப்பாய்
மந்தரக் கிரிமத்தி னாற்றிருப் பாற்கடன்
மதித்தவரி மருக வஞ்சி
வள்ளிமயி லேறும்வடி வேலனை மணந்தின்ப
வாரியிற் படிந்து மகிழக்
கந்தமிகு மும்மதக் களிற்றுரு வெடுத்துற்ற
கணநாத வடியர் மிடிதீர் . . . .

கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமங் திரமூர்த் தியே. (சு)

அத்துவித முத்திநிலை யுருவினுற் றுதிக்கையா
லறிந்திட வுணர்த்து கின்ற
வையனே மெய்யனே யாகுவா கனமேறு
மத்தனே பத்தி செய்வோர்
நத்துபொருள் யாவையு மளித்தாளு நாயகா
நரலைசூ ழிலங்கை மன்னன்
நல்குசிவ லிங்கத்தைப் பூவினிற் ருபித்து
நன்றருள் புரிந்த கோவே
சித்தர்யோ கியர்மனத் தகலாது நிற்கின்ற
தேவனே மூவர் முதல்வா
சித்திபுத் திகளாதி பலகன்னி திருமணஞ்
செய்கிட்ட செல்வ சூழ்ந்து
கத்துறு கடற்புவியி னிற்பணியு மன்பருட்
கவலைதனை மாற்றி மிக்க
கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமங் திரமூர்த் தியே, (எ)

தண்டரள மணிமுறுவ லயிராணி கேள்வன்வலி
சார்சூர பதும னுற்றுந்
தாங்கமுடி யாக்கொடுமை தீரவுயர் காழியந்
தலத்தெழுந் தருளி சனைப்
பண்டுமறை யாகமப் படிபூசை செய்தருட்
பயன்பெறற் காக மலர்கள்
பலப்பல வளிக்குநந் தனவனப் பிரதிட்டை
பண்ணிவளர் காலை மாரி

கொண்டல்பொழி யாமைகண் டுளமிக வருந்தியுன்
குறைசமல் வணங்கி யேத்தக்
குறுமுனிக் கலசநீர் கவிழ்த்துநந் தனவனங்
குறைவற வளம்ப டுத்த
கண்டின்மிகு சுவைமொழிச் சித்திபுத் திகண்மருவு
கசகர்ன வதந ரூபா
கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமந் திரமூர்த் தியே. (அ)

பண்கொண்ட மறைபரவு மேரம்ப செங்கையிற்
பரசுமான் சூல மேந்தும்
பரமன்முப் புரவசுரர் பகைமுடித் திடவேறு
படியிரத வச்சி றுத்த
விண்கொண்ட புகழுற்ற வரதவல் லபைகணவ
விசயவிக் கிநரா சனே
மேருவொத் தொளிர்புயக் கயமுகா சூரனை
வெலற்குவெண் கோடொ டித்தோய்
திண்கொண்ட புயமேவு மிராசரா சச்சோழன்
றிருமுன்னர் வைத்த நைவேத்
தியமெலாங் கணத்தமுது செய்தருட் டேவாரஞ்
சிந்தைமகிழ்ந் தரவ ளித்த
கண்கொண்ட நால்வாயின் வதநசுந் தரவிபுதர்
கடைந்தமிர்த முணவு யர்ந்த
கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமந் திரமூர்த் தியே. (கு)

பூதலந் தன்னின்மிடி யோரணுவுமில்லாத
புநிதநல் வாழ்க்கை வேண்டும்

பொற்புறுங் கற்புமனை யாள்வேண்டு மெழில்கொள்சற்
புத்திரர்கள் வேண்டு மென்று
மாதரத் தோடுபுண் ணியம்புரிய வேண்டும்வரு
மாதுலர்க் கில்லை யென்ன
வறையாம லிந்துவக் கின்றமனம் வேண்டுநின்
னடியர்பா லன்பு வேண்டும்
போதமருள் பூதிகண் மணிபூண்டு தலையாய
புனிதவைந் தெழுத்தை யென்றும்
பொற்புறச் செபித்தல்வேண் டும்மற்ற தெய்வத்தைப்
போற்றாத வாண்மை வேண்டுங்
காதலின் பால்வேண்டுங் கசமுகா விவையெலாங்
கடையனேற் களித்தாளுவாய்
கருணைபொழி தருமிறகு சேரியைங் கரவாதி
கர்த்தமந் திரமூர்த் தியே. (ய)

வாழி விருத்தம்.

அந்தணர் மறைகள் வாழி யாவினந் தேவர் வாழி
சுந்தர வேந்தன் வாழி தூயநற் சைவம் வாழி
யிந்திர செல்வம் பெற்ற வெழிற்றன வணிகர் வாழி
மந்திர மூர்த்தி வாழி மாநிலம் வாழி வாழி.

ஓம் சுபம்.

---

